# "அற்புத தரிசனம்"

தொகுப்பாசிரியர் :

பானுமதி இராமச்சந்திரன்,

22/1, வாசுதேவபுரம்,

திருவல்லிக்கேணி (ஐஸ் ஹவுஸ்),

சென்னை - 5

தொலைபேசி எண் : 843176

வெளியீடு : வீ.ஆர்.பி. பப்ளிகேஷன்ஸ்

# அற்புத தரிசனம்

## முன்னுரை

காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளின் நூற்றாண்டு விழாவை நாடு முழுவதும் கோலாகலமாக, அவரவர் வீட்டு சொந்த வைபவம் போலக் கொண்டாடி வருகின்றோம். ஒரு வருட காலம் இவ்விழாவினை அனுஷ்டிக்கும் பாக்கியம் பெற்றவர்களானோம்.

1988 ஆம் வருடம் 'மங்கை' எனும் மாதா பத்திரிகை நடத்திய ஒரு போட்டியில் கலந்து கொண்டு எழுதத் தொடங்கியதன் மூலம், பத்திரிகை உலகிற்கு எழுத்துப்பணி செய்ய, தன் ராசியான கரத்தினால் அறிமுகப்படுத்தி வைத்தார் அப்பத்திரிகையின் ஆசிரியர் திரு. ஏ. சுவாமிநாதன் அவர்கள். 'மங்கையர் மலர்' ஆசிரியை திருமதி. மஞ்சுளா ரமேஷ், 'ராஜம்' பத்திரிகை இணை ஆசிரியை திருமதி. சந்திரா ராஜசேகர், 'கல்கி' ஆசிரியை திருமதி. சீதா ரவி, இவர்களெல்லாம் பத்திரிகை உலகமும், மக்களும் என்னை இனம் கண்டு கொள்ளும்படி, ஊக்கம் அளித்து உதவினார்கள். அதனால்தான் இன்றளவும் 'பெரியவாள்' அனுக்ரஹத்தால் தொடர்ந்து எழுதி வருகிறேன். அதிகம் பூஜை செய்து பழக்கமில்லாதவள் நான். சமுதாயத்தில் என்னால் முடிந்த சிறு தொண்டுகள் செய்து கொண்டும், 'செய்யும் தொழிலே தெய்வம் என்று எழுதிக்கொண்டிருந்த சமயம் 'சங்கர ஜெயந்தி' விழாக்கள், மற்றும் பொது இடங்களில் சந்தித்த பலரும் 'பெரியவாளின்' அருமை, பெருமை, அற்புதங்களை எடுத்து சொல்ல சொல்ல திடீரென்று என் மனதில் ஓர் எண்ணம் தோன்றியது. "அங்கிங்கெனாதபடி எங்கும் பேசப்படும், அனைவராலும் கொண்டாடப்படும் மஹா பெரியவாளுக்கு நம் எழுத்து மூலம் ஆராதித்துக் கொண்டாடலாமே! நமக்குத் தெரிந்த எழுத்தின் மூலம் அவரது ஆசியும் அனுக்ரஹமும் பெற்றவர்களது அனுபவங்களை எழுதினால் என்ன? அது நம்மால் முடியுமே! 'பெரியவாளின்' மஹிமை நான் சொல்லியா தெரிய வேண்டும்? 'இல்லை' அந்த அற்புத தரிசனம்,

அனுபவித்து, உணர்ந்தவர்களுக்கே புரியும்! உணராதவர்களை உணர வைத்து, இன்று மதத்தின் பெயரால் நடக்கும் வன்முறைகள், கலவரங்கள் மறைந்து, கருணைக் கடலான அவர் நமக்கு சொல்லிய பொறுமையும், சாந்தமும், அஹிம்சையும் கொண்ட நல்வழியில் நடக்கச் செய்ய, ஸ்ரீராமருக்கு உதவிய அணில் போல் நான் இருக்க விரும்பினேன். அவரது அனுக்ரஹம் எனக்குக் கிடைக்கும் என்று எண்ணி அவர் பாதங்களில் என் எழுத்தினைக் காணிக்கையாக சமர்ப்பிக்கின்றேன்.

இருபத்தி இரண்டே நாட்களில் நூறுபேரை சந்தக்க வைத்ததும் அவர் அருள்தானே! சந்தித்த, கேட்ட அனைவரிடமும் விஷயங்களும் இருந்து மகிழ்வுடன் பகிர்ந்து கொண்டதும் அதிசயம்தானே? இதை எழுதி முடித்த கையோடு மூன்று 'பொயவர்களிடமும் ஆசி பெற விரும்பினேன். என் தோழி திருமதி மீனா நரசிம்மன் அவர்கள் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி அவர்களின் ஐம்பத்தி ஒன்பதாவது ஜயந்திக்காக நடக்கும் சுவாசினி பூஜையில் கலந்து கொள்ள காஞ்சீபுரம் சென்றவர் என்னையும் அழைத்துச் சென்றார். என் மனம் போல் மூன்று 'பெரியவாளின்' ஆசியும் கிடைத்தது நான் செய்த பெரும் பேறு!

இதை நூலாக வெளியிட விரும்பி பலவித முயற்சிகளில் இறங்கி, பலரை சந்தித்தும் முடியாமல் போய் மனம் வருந்தி நானே வெளியிட முடிவு செய்த சமயம் திரு. சேஷன், திருமதி ராஜி சேஷன் இருவரும் தங்களால் முடிந்த நிதி உதவியை செய்ததை நினைத்து, அவர்களுக்கு நன்றி கூற வார்த்தைகளைத் தேடுகின்றேன்.

'மஹா பெரியவாள்' வாழ்ந்த காலத்தில் நாம் வாழும் பாக்கியம் பெற்றோமே! அதை விட வேறென்ன பாக்கியம் வேண்டும்! 'பெரியவாளின்' பாத கமலங்களில் சமர்ப்பணம் செய்த இந்த 'காணிக்கை' அனைவராலும் படிக்கப் பெற்று அவரது அனுக்கரஹம் கிடைத்து நல்வாழ்வு வாழ வேண்டும் என்பதே என் மனமார்ந்த விருப்பம்.

*"ஜய ஜய சங்கர, ஹர ஹர சங்கர"*

சென்னை-5 பானுமதி ராமச்சந்திரன்
18-5-94

## 1) கணபதி அக்ரஹாரத்து பிள்ளையார் சதுர்த்தி

### சித்தூர் கோபால கிருஷ்ணன் (வயலின் வித்வான்)

ஸ்ரீ காஞ்சி காமகோடி மடத்தில் ஆஸ்தான வித்வானாக இருப்பவர். பரமாச்சார்யாளுடன் நாற்பது வருடங்களாகத் தொடர்புடையவர். அதற்கு முன்னாலும் எப்போதாவது ஒருமுறை பெரியவாளை தரிசிக்கும் வழக்கமுடையவராக இருந்தவர். 1940 ல் திருமணமான சமயம் 'பெரியவா' இசையனூர்ரில் தங்கியிருந்தாராம். மனைவியின் மாமாவின் ஊரானதால் அங்கு சென்று, வயலின் வாசித்து, ஆசி பெற்றது முதல் காஞ்சிக்குப் போக ஆரம்பித்தவர். பிரத்யக்ஷய தெய்வம் அவர். ஓராயிரம் நிகழ்ச்சிகளை சொல்லலாம் அவர் அனுக்ரஹம் பெற்ற நான் இரண்டு நிகழ்ச்சிகளைச் சொல்கிறேன்.

அ) முப்பது வருடங்களுக்கு முன்பு நடந்த நிகழ்ச்சி இது. வானொலி நிலையத்தில் 'வாத்ய கோஷ்டி' நிகழ்ச்சி ஒன்று உண்டு. அதில் வீணை, புல்லாங்குழல், வயலின் மிருதங்கம் இப்படி பல வாத்தியங்கள் ஒத்துப்போய் வாசிப்பது கேட்பதற்கு ரம்மியமாக, ஆனந்தமாக இருக்கும். ஒருமுறை 'பெரியவா' என்னிடம் "ஏதோ கோஷ்டி வாத்யம் வாசிப்பது நன்றாக இருக்குமாமே?" என்றார். சிறிது நேரம் கழித்து 'வாத்யங்களை ஒன்றாக சேர்த்து வாசித்தால் நன்றாக இருக்குமல்லவா?" என்று இது பற்றியே மாறி மாறிக் கேட்டதும், 'சங்கர ஜயந்தி' நிகழ்ச்சயில் வாத்யகோஷ்டி இசையை ஏற்பாடு செய்ய நினைத்தோம். இருக்கைகளை எடுத்துவிட்டு வாத்யங்களை சௌகரியமாக வைத்துக் கொள்ளும்படி பேருந்து ஒன்றை, ஓர் அன்பர் இலவசமாக ஏற்பாடு செய்து தந்தார். காஞ்சிபுரம் சென்று வாசித்தோம். 'பெரியவா' மிகவும் சிலாகித்து, எல்லோருக்கும் மாலை போட்டு, சன்மானம் அளித்தார். அதைவிட ஒவ்வொருவரையும், அவரவரது பெயரைக் கேட்டு,

இதுதானே உன் அப்பா பெயர்? தங்கநாயனம் கொடுத்தேனே என்று ஒருவரிடம் கேட்டதும் கண்ணில் ஜலம் வந்துவிட்டது அவருக்கு. கணபதி அக்ரஹாரத்தைச் சேர்ந்த வீணை தண்டபாணி அவர்களை அறிமுகப்படுத்தியதும், உங்கள் ஊரில் 'வினாயக சதுர்த்தி' பூஜை கொண்டாடுவீர்களா? என்றார். 'இல்லை' என்றதும், காரணம் கேட்டார். தெரியவில்லை அவருக்கு. பிறகு 'பெரியவா' சொன்னார். "பிள்ளையாரே அங்கு ஊருக்கு அதிபதியாக இருக்கிறார். அந்த ஊரிலுள்ள எல்லோருமே அன்று கோவிலுக்குச் சென்றுதான் பூஜை செய்வது வழக்கம். வடநாட்டிலிருந்து வந்த மாப்பிள்ளை ஒருவர் வீட்டிலேயே நான் செய்து கொள்ளுகிறேன். கூட்டத்தோடு கூட்டமாக சிரமமாக இருக்கும் என்று சொல்லி வினாயகருக்குட் பூஜையை ஆரம்பிக்க எண்ணி மாலையைப் போட்டபோது கையில் தேள் கொட்டிவிட்டது. அப்புறம் பூஜை எப்படி செய்வது? மாமியாரும், 'நான் கூடியமட்டும் சொன்னேன். மாப்பிள்ளையாச்சேன்னு அடிச்சுப் பேச முடியலை இப்படி ஆகிவிட்டதே என வருந்தினார். பிறகு கோயிலுக்குச் சென்று பூஜையில் கலந்து கொண்டனர்.' என்று கணபதி அக்கிரஹாரத்தைப்பற்றி அவரிடம் எடுத்துச் சொன்னார்.

திரு. சித்தூர் கோபாலகிருஷ்ணன்
வயலின் வித்வான்
237, R.K. Mutt Road,
Mylapore
Madras - 4
Res : 71295



## 2) " பெரியவாளின் ஞான திருஷ்டி"

### திரு. கணபதி நாக சுப்பிரமணிய ஐயர்

1963 ஆம் வருடம் கும்பகோணத்தில் மருதாநல்லூர் கிராமத்தில், சாக்கோட்டை என்ற இடம் (திருக்கலய நல்லூர் என்ற பாடல் பெற்ற ஸ்தலம்). அங்குள்ள அம்மன் கோவில் குருக்கள், ஒரு நாள் மாலை கோவில் கதவைச் சாத்திப் பூட்டிவிட்டு சினிமாவுக்குக் கிளம்பி போய்விட்டார். பெரியவா, அங்கிருந்து ஒரு மைல் தூரத்தில் தங்கியருந்தார். நானும், சில பக்தர்களும் அவர் அருகே நின்று கொண்டிருந்தோம். 'தாயார் பட்டினியா இருக்காளே' என்று வருத்தப்பட்டார். முதலில் எங்களுக்கு ஒன்றும் புரியவில்லை. பிறகு அந்தக் கோவிலுக்குச் சென்று பார்த்தோம். அந்த ஊர் கணக்குப் பிள்ளை உதவியுடன், ஒரு குருக்களை அழைத்துச் சென்று நைவேத்யம், பூஜைகள் செய்து முடித்தோம். எப்பேர்பட்ட ஞானதிருஷ்டியுடைய மகான் அவர் என்பதற்காக எனக்குத் தெரிந்த நிகழ்ச்சியை உங்களுடன் பகிர்ந்து கொண்டேன்.

விசலூர் கணபதி நாக சுப்பிரமணிய ஐயர்
விசலூர் போஸ்ட்
கும்பகோணம்
**R.M.S.**






## 3) வயிற்று வலி அகற்றிய அம்மன்

**திரு. ராம நாத சிவாச்சாரியார்**

விசலூர் மீனாட்சி அம்மன் கோவில் கும்பாபிஷேக நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்ய வந்திருந்த, அந்தக் கோவில் குருக்களை தற்செயலாகச் சந்தித்தோம். தங்கள் ஊர் மீனாட்சி அம்மன் கோவிலுக்கு 'பெரியவா' வந்த நாளை நினைவு கூர்ந்தார்.

பரமாச்சார்யாள் தங்கியிருந்த ஊருக்குச் சென்று அவரை தரிசிப்பது எங்கள் வழக்கம், ஒரு முறை நாங்கள் தரிசனம் செய்யச் சென்ற ஊரில், எங்கள் ஊர் பிட்சையும் முடிந்துவிட்டது. ஆனாலும் பெரியவாளிடம் சென்று எங்கள் ஊரான விசலூருக்கு வரவேண்டும் நீங்கள், என்று கேட்டுக்கொண்டோம். 'சரி'யென்று சம்மதித்துவிட்டார். நான்கு நாட்களில் வருவதாக சேதியும் வந்தது. அன்று பல்லக்கில் வந்து கொண்டிருந்தார். திப்பிராஜபுரம் எல்லை வந்ததும், பரமாச்சார்யாளுக்கு லேசாக வயிற்று வலி இருக்கவே, விசலூருக்குப் போகலாமா? வேண்டாமா? என்று ஒரு நிமிடம் யோசித்து, வருவதாக ஒப்புக்கொண்டுள்ளதால் வந்து சேர்ந்தார். எங்கள் ஊர் அம்மனைத் தரிசித்ததும் அவருக்கு இருந்த வயிற்று வலி மறைந்துவிட்டதாக அவரே சொல்லக் கேட்டோம்.

திரு. ராமநாத சிவாச்சாரியார்
கோவில் குருக்கள்
மீனாட்சி சுந்தரேசுவர் கோவில்
விசலூர் போஸ்ட்
கும்பகோணம் R M S



## 4) பெரியவாளின் சிலேடை

**திருமதி. பாலாம்பாள் குமரேசன்.**

என் கணவர் வயலின் வித்வான். என் மாமனார் சித்தூர் கோபால கிருஷ்ணன் அவர்கள் சிறந்த மகான். அவருக்கும் எங்கள் குடும்பத்திற்கும், பரமாச்சார்யாள் கண் கண்ட தெய்வமாக விளங்கி வருகிறார். பலமுறை காஞ்சி மடம் சென்று அவரைத் தரிசித்ததுண்டு. இருந்தாலும் குறிப்பிட்ட ஒரு நிகழ்ச்சியைச் சொல்கிறேன்.

1985 ஆம் வருஷம் 'பெரியவா' ஓரிக்கை என்ற இடத்தில் தங்கியிருந்த சமயம் வியாசபூஜை நடந்துகொண்டிருந்தது. அங்கு என் பிள்ளைகள் இரண்டுபேர், மைத்துனர் பிள்ளைகள் இரண்டு பேருக்கும் சேர்த்து நான்கு பிள்ளைகளுக்கும் பூணூல் போட்டோம். (எல்லோருக்குமே ஏழு, எட்டு வயதுதான்) பரமாச்சார்யாளை எல்லோரும் நமஸ்சரித்து, 'அபிவாதய' சொல்லி ஆசிவேண்டினர். மிகவாத்சல்யத்துடன் குழந்தைகளை ஆசிர்வதித்த அவர், 'உன் பெயர் என்ன?' என்றார். 'பதஞ்சலி' என்றதும் " நீ என்ன வாசிக்கிறாய்?" (படிக்கிறாய்) என்று கேட்டதும், 'புல்லாங்குழல்' என்றான். இன்னொரு பையனைக் கேட்டதும் 'பிடில்' என்றான். அவர்கள் எந்த வகுப்பில் படிக்கிறார்கள் என்று பெரியவா கேட்டதைப் புரிந்து கொள்ளாமல் அவர்கள் வாசிக்கும் வாத்யத்தைப் பற்றி சொன்னதும், "அப்படியா? பிடில், புல்லாங்குழல் வாசிக்கிறேளா?" வாசியுங்கள் என்றார். இரண்டு மூன்று கீர்த்தனைகளை மிகவும் சந்தோஷமாக வாசித்தனர். அதற்குள், அருகில் இருந்தவர்களடம் சொல்லி, எங்களுக்கு, (இரு தம்பதிகளுக்கும்) ஒன்பது கஜம் புடவை, வேஷ்டி, அங்கவஸ்த்திரம், என் மாமனாருக்கு சால்வை, குழந்தைகளுக்குக் கழுத்தில் மாலையாகப் போட பட்டுத்துண்டுகளை வரவழைத்து

ஆசிர்வதித்துக் கொடுத்தார். குழந்தைகளிடம், "உங்கள் தாத்தாவுக்கு தாத்தா. சித்தூர் ராமசேஷய்யரையும் தெரியும். சித்தூரில் பிட்சாவந்தனம் செய்தவர். நான் உங்களது ஐந்து தலைமுறையினரையும் பார்த்தவன்" என்று குழந்தை போல பேசினார். எங்கள் அனைவருக்கும் கண் களில் நீர் சொரிந்தது ஆனந்தத்தால். அன்றைய தினம் மிக பாக்கியமான தினம் எங்களுக்கு.

திருமதி. பாலாம்பாள் குமரேசன்
C/o. சித்தூர் கோபாலகிருஷ்ணன்
237, ராகிருஷ்ணாமடம் தெரு
மயிலாப்பூர்
சென்னை - 4.



## 5) புன்னகையின் பொருள்

**சித்தூர் திரு. வெங்கடேசன் (புல்லாங்குழல் வித்வான்)**

ஒரு சமயம் என் தந்தை சித்தூர் திரு. கோபால கிருஷ்ணன் அவர்கள், மீரஜ்ஜில் வயலின் வாசிக்க ஏற்பாடாகியிருந்தது. நான் புல்லாங்குழல் வாசிப்பதாகவும் திரு. ரமேஷ் மிருதங்கம் வாசிக்கவும் சென்று இருந்தோம். முதல் இரண்டு நாட்கள் வாசித்து முடித்தோம். மூன்றாம் நாள் மாலை, மஹாலக்ஷ்மி எக்ஸ்பிரஸில் டிக்கட் ரிசர்வ் செய்துள்ளதைப் 'பெரியவா'ளிடம் சொல்லி உத்தரவு வாங்கிக் கொள்ளச் சென்றோம். உடனே 'பெரியவா' "இன்றும் இரவு இருந்து வாசியுங்களேன். நான் கேட்கிறேன்" என்றார். டிக்கட் தயாராக உள்ளது என்று

இழுத்தபடி சொன்னோம். டி.டி. ஆரிடம் சொல்லி மறுநாளைக்கு மாற்றிக் கொள்ளுங்கள் என்று சொன்னதால், 'பெரியவா' உத்தரவைத் தட்ட முடியாமல் அன்றைய டிக்கட்டை ரத்து செய்துவிட்டு, மறு நாளைக்கு வாங்கினோம். மறுநாள் செய்தித் தாளைப் படித்ததும் பெங்களூரிலிருந்து பம்பாய் செல்லும் 'மஹாலக்ஷ்மி எக்ஸ்பிரஸ்' விபத்துக்குள்ளானதைப் படித்துவிட்டு திடுக்கிட்டோம். என்னே அவரது அருள்! எங்களைத் தடுத்து நிறுத்தியது எங்கள் இசையை அவர் கேட்பதற்காக அல்ல. எங்கள் உயிரைக் காப்பதற்காக என்று உணர்ந்து ஆனந்தக் கண்ணீருடன் மறுநாள் விடைபெற்றோம். அப்போது 'பெரியவா' ஒரு புன்னகையுடன் "சௌக்கியமாகப் போய் வாருங்கள்" என்று விடை கொடுத்ததும், அந்தப் புன்னகைக்குப் பொருள் புரிந்து ஆனந்தமாக விடைபெற்றுக் கிளம்பினோம். அப்பேர்பட்ட தீர்க்கதரிசி அவர்!. கண்கண்ட தெய்வம் அவர்!.

சித்தூர் திரு. வெங்கடேசன்
புல்லாங்குழல் வித்வான்
237, ராமகிருஷ்ணாமடம் தெரு.
மயிலாப்பூர்
சென்னை - 4



## 6) ஜகத்குரு

### மாஸ்டர் ரவி

வள்ளிமலை சுவாமிகளின் சிஷ்யர் சாதுராம் சுவாமிகள் ஒருமுறை இவர் பிரசங்கம் செய்தபோது, தான் கேட்டதை நம்மிடம், பிளஸ் 2 படிக்கும் மாணவன் ரவி சொன்னது. இவனது தந்தை இன்கம் டாக்ஸ் ஆபீஸர் திரு. முத்துகிருஷ்ணன்.

ஒரு முறை வெளிநாட்டிலிருந்து வந்த சிலர் பரமாச்சார்யாளைப் பார்த்து "நீங்கள் இந்தியர்களுக்கு மட்டும்தானே குருவாக இருக்கிறீர்கள்? உலக அளவில் இல்லையே? பிறகு ஏன் எல்லோரும் 'ஜகத்குரு' என்ற பெயரில் உங்களை அழைக்கிறார்கள்?" என்று கேட்டார்கள். அதற்குப் 'பெரியவா', "காகம் இருக்கிறதே சாதம் போட்டவுடன் தன் இனத்தைக் கூவி அழைத்துப் பகிர்ந்து உண்கிறது. எறும்புகளும் அப்படித்தான். இப்படி உலகில் உள்ள ஜீவராசிகள் அனைத்திடமிருந்தும் ஒரு நல்லதை நான் கற்றுக் கொண்டேயிருக்கிறேன். உலகிலுள்ள அனைத்தும் எனக்கு குருவாக இருந்து கற்றுக் கொடுப்பதால் 'ஜகத்குரு' என்று அழைக்கின்றனர்". என்று பதில் அளித்தாராம். இந்த நிகழ்ச்சி என் மனதில் பசுமரத்தாணி போல பதிந்து விட்டது. என்கிறான் அந்தச் சிறுவன்.

**Mr. M. Ravi,**
**48 A, Janakiraman St.,**
**West Mambalam**
**Madras 600 033**





## 7) ஆணவம் அடங்கியது

**திருமதி.லக்ஷ்மி வெங்கடராமன்**

இவர் கணவர் பாரத ஸ்டேட் வங்கியில் ஆபிசராக இருக்கின்றார். ஆன்மீகத்தில் மிகவும் ஈடுபாடு உடையவர். பரமாச்சார்யாளைப் பற்றிக் கேட்டவுடன் மடைதிறந்த வெள்ளம் போல பல நிகழ்ச்சிகளைச் சரமாரியாகச் சொல்லி நம்மை அசர வைத்துவிட்டார். இவரது மாமா திரு.ரமணி அவர்கள் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி அவர்களுடன் படித்தவர். இவரது மாமிக்கு அப்பா, பரமாச்சார்யாளுக்குப் பல்லக்கு தூக்கிய பெருமையுடையவர்.

அ) சுமார் இருபத்தி ஐந்து வருடங்களுக்கு முன்பு நடந்தது. நான் அப்போது சிறுமியாக இருந்தேன். தஞ்சாவூரில் மேலவீதியில் என் உறவுக்கார பெண்மணி ஒருவர் இருந்தார். அதிகம் யாருடனும் பேச மாட்டார். குறிப்பாக ஏழைகளிடம் பேசப் பிடிக்காது. தனக்கு யாருடைய தயவும் தேவையில்லை என்று நினைத்துக் கொண்டிருந்தார். அலங்காரப் பிரியை சாண் அகல ஜரிகைப்பட்டுபுடவையும், உடல் முழுவதும் நகைகள் ஜொலிக்க இருப்பார். நவராத்தி, சுமங்கலிப் பிரார்த்தனை போன்ற விசேஷ தினங்களுக்கு பணக்காரர்களை மட்டுமே அழைப்பார். அக்கம் பக்கத்தினருக்கோ, ஏழை, எளியவருக்கோ தாம்பூலம் கூடக் கொடுக்க மாட்டார். தஞ்சையில் 'பெரியவா' வந்து தங்கியிருந் தார். அனைவரும் தரிசிக்க சென்றோம் அந்த அம்மா நமஸ்காரம் செய்தவுடன் 'பெரியவா' அவளிடம் ஒரு மூட்டை நெல்பொரியைப் பொரித்து ஒரு வாரத்தில் மடத்தில் கொடுத்துவிடும்படி உத்தரவிட்டார். அவரும் பெரியவா தன்னிடம் மட்டும் ஸ்பெஷலாகப் பேசியதற்கு சந்தோஷப்பட்டு வீடு திரும்பினார். மூட்டை நெல் பொரிப்பது ஒரு ஆளால் சாத்தியமாகுமா? வேலைக்காரியைச் செய்யச் சொன்னாள்.

அவளாலும் அதிகம் உதவ முடியவில்லை. நாள் நெருங்கிவிட்டது. செய்வதறியாமல் திகத்த அவள் அந்தத் தெருவில் இருந்த அனைவரது வீட்டுக்கும் வலியச் சென்று உதவி கேட்டாள். அவளைப் பற்றி தெரிந்திருந்தாலும் 'பெரியவா' மடத்துக்காகக் கேட்டதால் அனைவரும் உதவினர். அன்றுதான் மனித உதவி பணத்தைவிட எத்தனை சக்தி வாய்ந்தது, முக்கியத்துவம் உள்ளதென உணர்ந்தாள். உணர்த்தினார் பரமாச்சார்யாள். அதன்பிறகு நவராத்திரி, மற்ற விசேஷங்களுக்கு அனைவரையும் அழைத்து மஞ்சள் குங்குமம் கொடுப்பதை வழக்கமாகக் கொண்டாள்.

திருமதி லக்ஷ்மி வெங்கட்ராமன்
கோயமுத்தூர்.





## 8) 'இன பேதமற்ற பெரியவா'

**திரு.டி.பி. கிருஷ்ணன்** *: (ஓய்வு பெற்ற வங்கி அதிகாரி)*

*1954*ல் தியாகராய நகரில் இருந்தேன். நான், ஓர் ஐயங்கார், ஒரு பிள்ளைமார் வகுப்புக்காரரர் மூவருமாக ஒரு அறையில் தங்கியிருந்தோம். நாங்கள் வேலை செய்யும் **State Bank of India**வில் தொடர்ந்து மூன்று நாட்கள் விடுமுறை வந்தது. எப்போதுமே நான் தர்ம சிந்தனை, பொதுநலம் பற்றி மனப்பான்மையுடன் இருப்பதனால் என்னை 'குரு' என்று நண்பர்கள் அழைப்பார்கள். 'என்ன குரு காஞ்சிபுரம் போகலாமா?' என்றதும், நாங்கள் மூவரும் சென்றோம். ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி அவர்கள் பட்டத்துக்கு வந்த புதிதாகையால் மகாபெரியவாள் பாடம் நடத்திக் கொண்டிருந்தார். அன்று விசேஷ தினமாதலால் ஏகக் கூட்டம், ஓர் ஓரத்தில் நாங்கள் அமர்ந்தோம். என்னுடன் வந்த 'பிள்ளை' இனத்தைச் சேர்ந்த நண்பர் பார்ப்பதற்கு மிகவும் லட்சணமாக நல்ல நிறமாக பிராமணகுலத்தை சேர்ந்தவர் போல இருப்பார். 'பெரியவா' தீர்த்தம் தரும்போது முதலில் ஐயங்கார் நண்பர் வாங்கிக் கொண்டார். 'உன்னோடுயார் வந்திருக்கா?' என்றதும் என்னைச் சொன்னார். நானும் தீர்த்தம் வாங்கிக் கொள்ளும்போது 'உன்னோடுயார் வந்திருக்கா?' என்றார். எப்டி பொய் சொல்வது? 'என்ன யோசிக்கிற, கூப்பிடு' என்றார். பூணல் இல்லாமல் சட்டையைக் கழற்ற பயந்து கொண்டு ஓரமாகப் பயத்துடன் அமர்ந்திருக்கும் என் நண்பரைப் பற்றி சொன்னதும், 'அவரைக் கூட்பிடு' என்றார். நடுங்கிக் கொண்டே வந்து தீர்த்தம் வாங்கிக் கொண்டார். அந்த நண்பர். 'பெரியவா' எங்களுடன் பேசிக் கொண்டிருப்பதைக் கவனித்த மற்றவர்கள் எங்களைப் பிரபலமானவர்கள் என்று நினைத்து பேச ஆரம்பத்தார்கள். 'என் ஜாகைக்கு வா. நாளைக்கு போகலாம்' என்று ஜகத்குருவே

சொன்னதும் நாங்கள் தனியாகச் சென்று ஆசி பெற்றோம். ஏழு வருடங்களே சர்வீஸ் ஆகியிருந்த அந்த நண்பருக்கு மறு வருடமே ஆபீஸராக உத்தியோக உயர்வு கிடைத்தது. 'பெரியவாளின்' பரிபூரண கடாக்ஷம் எங்களுக்குக் கிடைத்த நாள் அது.

**Mr.T.P.Krishnan**
**27, S.B.I. Officers Colony, Poonamalli High Road**
**Madras 600 106**








## 9) மருந்தின்றி குணமான மூக்கு

**திருமதி.விசாலம் கிருஷ்ணன்**

திரு. பஞ்சாபகேசய்யர் என்று மயிலாப்பூரில் அட்வகேட் ஒருவர் இருந்தார். அவர் மனைவி நவராத்திரி ஆரம்பத்தில் 'பெரியவாள்' எங்கே இருந்தாலும், அங்கு சென்று அவரைத் தரிசித்து, தீர்த்தம் வாங்கிக் கொண்ட பிறகுதான் சாப்பிடுவார். அப்போது 'பெரியவா' நங்கவரத்தில் முகாம் இட்டிருந்தார். அட்வகேட் மனைவி அப்போது மதுரையில் இருந்தார். அந்த ஊர் பேங்க் ஏஜெண்ட் திரு.கே.சுப்பிரமணியம் அவர்களின் மனைவி, இன்னும் இரண்டு தோழிகளுடன் ஐந்து பேராக நங்கவரத்துக்குக் கிளம்பினர். திருச்சியில் திரு.கிருஷ்ணன் வீட்டுக்குப் போய்விட்டால் அவர் நங்கவரம் செல்ல வழிகாட்டுவார் என்று சொன்னதன் பேரில் என் கணவரைச் சந்தித்தனர். 'என் மனைவி உங்களுக்கு உதவுவாள்' என்று என்

கணவர், அவர்களை வீட்டுக்கு அனுப்பு வைத்தார். நான் அன்று நவராத்திரி ஆரம்பநாள் என்று சர்க்கரைப் பொங்கல், வடை, நைவேத்தியத்துக்கு செய்து, 'சஹஸ்ரநாமம்' படித்துக் கொண்டிருந்தேன். என் அம்மா வீட்டில் தங்கி படித்து வந்த என் பதினைந்து வயது மகள் லீவுக்கு வந்திருந்தாள். அவளுக்கு மூக்கில் சிறு பிராப்ளம், எப்போதும் அடைத்துக் கொண்டிருக்கும். கவலைப்பட்ட அவளிடம் நியும் என்னுடன் 'சஹஸ்ரநாமம்' சொல் நல்லதே நடக்கும்' என்று சொல்லி இருவ்ரும் சொல்லிக் கொண்டிருந்த சமயம், ஐந்து சுமங்கலிகளுமாக ஆட்டோவில் வந்து இறங்கினர். பார்த்தவுடன் மனதுக்கு மிக மகிழ்ச்சியாக, நிறைவாக இருந்தது. பிரசாதம் சாப்பிடச் சொன்னேன். அட்வகேட் மனைவி, 'பெரியவா'ளிடம் தீர்த்தம் வாங்காமல் சாப்பிட மறுத்ததும் எலுமிச்சம்பழம் பிழிந்து கொடுத்தேன். மற்றவர்கள் சாப்பிட்டனர். உடனே எல்லோருமாக 'நங்கவரம்' சென்றோம். கண்கொள்ளாக் காட்சி ஜகஜ்ஜோதியாக, இரட்டை வரிசைகளாகச் சுவாசினிகள் சகஸ்ரநாமம் சொல்லிக் கொண்டிருந்தார்கள். தீபாராதனை, பூஜை முடிந்து அங்கேயே சாப்பிட்டோம். மடத்தைச் சேர்ந்த ஒருவர் என் பெண்ணிடம் மட்டும் 'சாரதாம்பாள்' படத்தையும் மாம்பழம் ஒன்றையும் கொடுத்தார். அதன் பிறகு அவளுக்கு மூக்கில் தொந்தரவே இல்லை. மருந்து எதுவும் சாம்பிடவும் இல்லை. அன்றைய தினத்தை என்னால் மறக்கவே முடியாது.

**Mrs.Visalam Krishnan**
**27, S.B.I. Officer's Colony**
**P.H. Road**
**Madras 600 106.**



## 10) வேண்டியது கிடைக்கும்

### திருமதி.லலிதா பாரதி

இவர் மகாகவி பாரதியார் அவர்களின் பேத்தி என்பதுடன் பிரபல கர்நாடக இசைக்கலைஞர் திரு.ராஜ்குமார் பாரதி அவர்களின் தாயார், சிறந்த பேச்சாளர், எழுத்தாளர். பெரியவாளைப் பற்றி சொல்ல தனியாக என்ன உள்ளது? எல்லாமே அவர் ஆசியாலும், அனுக்ரஹத்தாலும்தான் நடக்கிறது என்கிறார்.

'என் மனதிலே பிரத்யக்ஷமான தெய்வமாக இருப்பவர் பரமாச்சார்யாள். ஒரு முறை சிநேகிதி விட்டுக்கு வந்தாள். தன் மகனுக்கு மெடிகல் காலேஜில் இடம் கிடைக்க வேண்டுமேயென்று மிகவும் வேதனைப்பட்டாள். அவள் 'பிள்ளை' வகுப்பைச் சேர்ந்தவள். நான் பூஜை அறைக்குச் சென்று கண்ணாடி பிரேம் போட்டு வைத்தருந்த 'பெரியவா'ளின் போட்டோவை எடுத்து வந்து அவள் கையில் கொடுத்தேன். அவரை நினைத்து பூஜை செய் நிச்சயம் கிடைக்கும்' என்றேன். இரண்டு நாட்களில், சந்தோஷமாக ஓடி வந்து 'உன் கையால் பெரியவர் படம் கொடுத்தாயே, மெடிகல் சீட் கிடைத்துவிட்டது' என்று சொன்னவள் கண்ணில் ஜலம் வந்துவிட்டது. நினைத்த காரியம் சித்தியாக்கும் கண்கண்ட தெய்வம் அவர்.

b) ஒரு முறை என் மகன் ராஜ்குமாருக்கு காஞ்சிபுரத்தில் பாட அழைப்பு வந்தது. அதே நாளில் 'கிருஷ்ணகான சபா'வில் பாட ஒப்புகொண்டிருந்ததால் அதை ஏற்க முடியவில்லை. பரமாச்சார்யாளை மனதில் நினைத்து 'பகவானே உன் சன்னதியில் பாட அழைத்தும் ஏற்க முடியவில்லை? நீயே எது நல்லதோ அதை செய்' என்று மனதார வேண்டிக் கொண்டேன். திரும்ப தொலைபேசி அழைத்தது. ராஜ்குமாருக்கு காஞ்சியில்

பாட வேறு ஒரு தேதியை மாற்றிக் கொடுத்தனர். அவர் கருணையை என்னென்று சொல்வேன்!

**Mrs.Lalitha Bharathi**
**AB-72, Anna Nagar**
**(Near Grand Theatre)**
**Madras Ph : 6211657**



## *11)* என் வேதனை தாங்கிய பெரியவாள்

திருமதி.மீனாட்சி

காஞ்சி காமகோடி மடத்தினருக்கு மிகவும் பரிச்சயமானவர் மீனாமாமி. நுங்கம்பாக்கத்தில் இருக்கிறார். பல வருடங்களாக, ஏன்? ஐந்து வயதாக இருக்கும்போதே முதன் முதல் பெரியவாளின் அனுக்ரஹம் கிடைக்கப்பெற்றவர். சன்னியாசம் பெற்று, பெரியவாளின் சரணத்திற்குப் பாதபூஜை செய்யும் பாக்கியமும் பெற்று சகலமும் நீயே 'சர்வேஸ்வரா' என்று அனுதினமும் பரமாச்சார்யாளைப்பற்றி பேசியே தன் இறுதிக்காலத்தை முடிக்க நினைக்கும் தீவிர பக்தை அவர். கிருஷ்ணர் பிறந்தபோது அந்த யுகத்தில் பிறந்தோமோ என்று கோபிகைகள் மனமகிழ்ந்தது போல பரமாச்சார்யாள் அவதரித்த சமயம் நாமும் இருந்து கண்குளிர அவரை தரிசிக்கும் பாக்கியம் பெற்றோமே என்று கண்களில் பரவசம் பொங்கக் கூறிகின்றார். மகா 'பெரியவா'தான் எனக்கு எல்லாம்;. அவரன்றி ஓர் அணுவும் என் குடும்பத்தில் அசையாது என்கிறார்.

a) ஒரு சமயம் பெரியவா குருகுலத்தில் இருந்தார். பூஜை முடிந்து விச்ராந்தியாக அவர் இருக்க எதிர்வீட்டை ஏற்பாடு செய்திருந்தனர். திரு. பரணீதரன் அவர்களின் தங்கை

பார்வதிக்கு திருமணம் ஆவது தாமதமாகிக் கொண்டேயிருந்ததால், பரமாச்சார்யாளிடம் அவளை அழைத்துப் போகுமாறு கேட்டார். நான், பார்வதி அவள் தோழி சுச"லா மூவரும் குருகுலம் சென்றோம். விச்ராந்தியாக இருந்த பெரியவாளை தரிசிக்கச் சென்றோம். என்னிடம், உன் கூட யாரு வந்திருக்கா? என்றார். பார்வதியைப் பற்றி சொல்லி அவரது ஆசி கேட்டதும் ஆசிர்வதித்தார். சுசிலாவுக்கும் 'எல்லாம் சரியாகிவிடும்' என்றார். உடனே பெரியவா தலையைப் பிடித்தக் கொண்டு சாய்ந்தார். உதவிக்கு வந்தவர்கள் எங்களைத் துரத்தினர். பீதியில் மனம் பதற பெரியவாளுக்கு என்ன ஆச்சோ? என்று குருகுலத்தினுள் அமர்ந்திருந்தபோது, ஒரு மணிநேரத்தில் பெரியவா வந்தார். என்னைப் பார்த்து சிரித்தார். மனம் சமாதானமடைந்து வீடு திரும்பினேன். வீட்டுக்குள் நுழைந்தால் என் கணவர் தலையில் அடிபட்டுக் கொண்டிருந்தார். கார் 'பானட்டை' திறந்து ரிப்பேர் செய்தபோது பானட் தலைமீது விழுந்து விட்டதாம். விழுந்த வேகத்தில் துண்டாகப் போயிருக்க வேண்டிய உடல், தலையில் சிறு காயத்துடன் தப்பினார் என்பது மட்டுமல்ல அவர் தலையில் பானட் விழுந்த அதே நேரம்தான் அங்கு 'பெரியவா' அதைத் தாங்கிக் கொண்டதால் சாய்ந்திருக்கிறார் என்று அறிந்ததும் நான் பட்ட இன்பம் சொல்லி முடியாது.

**b) 1970** ஆம் வருஷம், அன்று வைகுண்ட ஏகாதசி. திருவள்ளுர் பெருமாள் கோவிலுக்குச் செல்வதாக என் கணவரிடம் பொய் சொல்லிவிட்டு நாகலாபுரத்தில் தங்கியிருந்த பெரியவாளைத் தரிசிக்கச் சென்றோம். என் கணவர் கோபக்காரராதலால் அத்தனை தூரம் செல்லவேண்டாமெனத் தடுத்துவிடுவாரே என்று நினைத்தோம். 'பெரியவா' அப்போது 'சூரியாபுரம்' கிராமத்திலே இருந்தார். நான், பிள்ளை, பெண், பேத்திகளுடன் காரில் சென்றோம். அந்த கிராமத்தில் சிறு ஓடை.

கார் போகாது. காரை நிறுத்திவிட்டு நடந்து போனோம். என் பெண் பானுவுக்குத் திருமணம் தடைபட்டுக்கொண்டே போவதால் அவளையும் அழைத்துச் சென்றேன். பெரியவாளிடம் 'நீங்கதான் தடையை நீக்கவேண்டும். வேறு கதியில்லை' என்று அலறிக்கொண்டே இருவரும் நமஸ்கரித்தோம். அங்கு குடிலுக்கு அருகே மாடுகட்டும் இடமிருந்தது. 'தவனை' என்று சொல்லப்படும் மாட்டுக்கு வைக்கோல் போடும் இடம் உள்ளது. (இரு மூங்கில்களுக்கிடையே பள்ளமா) அதற்குள் சென்று 'பெரியவா' அமர்ந்தார். நான் திரும்ப அவரிடம் வரன்கள் தட்டிப் போவதைச் சொல்லி புலம்பியதும், கையை வேகமாக ஆட்டி மூன்று முறை 'தடையே விலகு' என்று சொன்னார். எங்களை அருகே அழைத்து கண்ணைத் துடைச்சுக்கோ என்றார். பானுவை 'அசடாட்டம் அழாதே' என்று கூறியபடியே ஆசிர்வதித்தார். உத்தரவு கொடுத்தார். வீட்டுக்கோ விரைவில் வரவேண்டும்! அதனால் திருத்தணி செல்லும் குறுக்குப்பாதை வழியாக வந்தோம். கொஞ்சதூரம் பாதை நன்றாக இருந்தது. பிறகு பெரும் கற்கள். டயர் பஞ்சராகிவிடும் நிலை. பிறகு சிறிது ஜலத்துடன் ஆற்றுமணல் அதில் கார் புதைந்துவிட்டது. எடுக்கவே முடியவில்லை. 'பெரியவா' இப்படி மாட்டிக் கொண்டோமே! காப்பாத்து. இனி பொய் சொல்விட்டு வரமாட்டோம்' என்று அலறினோம். ஈ, காக்கை தென்படாத அத்வான இடமான அந்த இடத்தில் ஒரு லாரி வந்தது. அந்த டிரைவர் வண்டியை எடுத்து சரியாக நிறுத்திவிட்டு கிளம்பினான். சில நொடிகளில் கண்ணிலேயே காணும் அந்த லாரியை ஓட்டிச் சென்றதாகவே தெரியவில்லை. திரும்ப பத்து மைல் சென்றதும் பள்ளம். அப்போதும் 'பெரியவா, பெரியவா' என்று அரற்றினோம். அப்போது ஒரு குடியானவன் வந்து

நிலைமையை அறிந்ததும் 'என் பின்னாலேயே வா' என்று நடந்து சென்றார். பாதி வரப்பும், வயலுமான அந்த இடத்தில் எப்டிக் காரை ஓட்டினோமோ தெரியாது. சரியான பாதை வந்ததும் நன்றி சொல்லத் திரும்பிப் பார்த்தால் அந்தக் குடியானவனைக் காணோம். யார் வந்தது? குடியானவனாக! சந்தேகமில்லை பெரியவாதான்! அடிப்பாகம் முழுவதும் பழுதடைந்த அந்த வண்டியில் எப்படி வந்தோம்? ஆச்சரியம்தான்! என் கணவரிடம் உண்மையைச் சொன்னபோது கோபிக்கவே இல்லை. அன்று 'பெரியவா'ளின் பரிபூர்ண கடாக்ஷத்தாலும், அனுக்ரஹத்தாலும் பிழைத்தோம். பிறகு உண்மையைச் சொல்லிவிட்டே பெரியவாளை தரிசிக்கக் கிளம்புவோம்.

**Mrs.Meenakshi Ammal**
**14, Thirumurthy Nagar Ist Street**
**Nungambakkam**
**Madras 600 034**



## 12) பெரியவா தந்த மாலை

### திருமதி.பானு பாலசுப்ரமணியம்

இவர் மீனா மாமியின் மகள். சிறந்த சமூக சேவகி, காங்கிரஸ் பேச்சாளர். மடத்துக்கு அடிக்கடி செல்லும் பழக்கமுள்ளவர். 'பெரியவாளை' அனுதினமும் பிரார்த்திக்கும் தீவிர பக்தியுடையவர்.

## நான் சொன்னதும் வரன் பாருங்கோ!

a) என் திருமணப் ள்பத்திரிகை, திருமாங்கல்யம், மூக்குத்தி, சங்கிலி இவைகளை எடுத்துக் கொண்டு அம்மா காஞ்சிபுரம் போனாள். பழம், தேங்காய்த்தட்டு மீது பத்திரிகையை வைத்து ஆசிர்வதிக்கக் கேட்டாள். 'கையில் என்ன?' என்றார். கொண்டா' என்று திருமாங்கல்யத்தை வாங்கி ஒரு முக்காலி கொண்டு வரச் சொல்லி அர்ச்சனை செய்தார். மூக்குத்தியைத் துடையில் வைத்துக் கட்டைவிரலால் தடவினார். கையில் குங்குமத்தோடு அவைகளைச் சேர்த்துக் கொடுத்தார். 'ஜாக்கிரதையா வச்சுக்கோ' என்றார். 'புடவையெல்லாம் வாங்கத் தயாராக வந்திருக்கேன்' வாங்கலாமா என்றாள் அம்மா 'உம் வாங்கு வீணாகவா போகப் போறது' என்றார். 'நான் சொல்றதைக் கேளு. முதலில் அந்தக் காகிதத்தைத் தூக்கி எறி' என்றார். அங்கு எந்தக் காகிதமும் இல்லை. தட்டின் மீது பத்திரிகைதானே இருக்கிறது' என்றாள் அம்மா. 'அதுதான்' என்று 'பெரியவா' சொன்னதுமே விட்டெறிந்துவிட்டாள். சரி, இந்தக் கல்யாணம் நடக்காது, புடவை வாங்க வேண்டாம் என்று தீர்மானித்தாள். கூடப் போயிருந்த என் அத்திம்பேர், 'பெரியவா புடவை வாங்க உத்தரவு கொடுத்தாரே, அதனால் வாங்கலாம்' என்றதும் புடவைகள் வாங்கி வந்தோம். திருமணத்துக்கு இரண்டு நாள் முன்னாடி 'உங்கள் பெண்ணுக்கு ஏற்ற மாப்பிள்ளை நான் இல்லை. என்னைவிட நல்ல இடம் பாருங்கள்' என்று சொல்லி மாப்பிள்ளையே திருமணத்தை நிறுத்திவிட்டார். சஞ்சல மனமுள்ள மனிதரை நான் மணம் செய்து கொள்ள விரும்பவில்லை; பெரியவாளைப் பார்த்து சொல்வதற்குப் போனேன். கிணற்றிங்கரையில் பலகையில் உட்கார்ந்து ஸ்னானம் செய்து கொண்டிருந்தார். வழிந்து வந்து கொண்டிருந்த தண்ணீரில் படுத்துக் கொண்டு அழுதேன்.

'எனக்கு ஏன்? இந்த நிலை. நான் நன்றாகப் படிக்கனும் எனக்கு எல்லாமே வெறுத்துப் போச்சு' என்று அழுதவுடன், 'எழுந்திரு என்றார். பதில் சொன்னால்தான் எழுந்திருப்பேன்' என்றேன். 'அவளைத் தூக்குங்கோ' என்றார். 'நீ அழுவது இதுதான் கடைசி தடவை, அமோகமா இருப்ப, மனம் போல் நடக்கும்' என்றார். அம்மாவை வரச் சொல், பஞ்சாங்கத்தையும் பார்த்து 'நான் சொல்லும் வரை வரம் பார்க்காதே! என்றார். இன்று நல்ல கணவர் ஒரு மகன், ஒரு மகளுடன் மகிழ்வாக இருக்கிறேன். அவர் ஆசியினால்.

**Mrs.Banu Balasubramaniam**
**14, Thirumurthy Nagar Ist Street**
**Nungambakkam, Madras 600 034**







## 13) பெரியவா கேட்ட பத்து ரூபாய்

**திருமதி.சந்திரா வெங்கடராமன்**

வருடந்தோறும் 'சங்கர ஜெயந்தி' கொண்டாடி வரு[illegible] மறைந்த திரு.பி.டி. பாணி ஐயரின் மகள். இவர் கணவர் மறைந்[illegible] சோழவரம் திரு.வெங்கடராமன் அவர்கள் பிரபல சங்கீத மேதை[illegible] அரியக்குடி இராமனுஜய்யங்கார் அவர்களின் சிஷ்யர்.

ஒருமுறை சிவஸ்தலம் என்கிற இடத்தில் 'பரமாச்சார்யாள்' இருந்தபோது, நானும், என் கணவரும் தரிசிக்கச் சென்றோம். அன்று 'யுகாதிப் பண்டிகை'. 'பெரியவா' என் கணவரிடமும் இன்னும் சிலரிடமும் 'பத்து ரூபாய் கொடுங்கோ' என்று கேட்டு வாங்கினார். 'வெட்டியான், தலையாரி இவர்களுக்கெல்லாம் வேஷ்டி வாங்கி வரச் சொல்லி 'உங்கள் கையால கொடுக்கனும்

மரத்தடியில் உட்கார்ந்திருங்கள்' என்றார். மேலும் அங்கு வந்த சிலர் பணம் தருவதாக சொன்னபோது 'தேவையானது கிடைத்து விட்டது, போதும்' என்று மறுத்துவிட்டார். எங்களுக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது. அவரே பணம்கேட்டு கொடுக்கமுடிந்ததே என்று. மரத்தடியில் பாணிஐயர் மாப்பிள்ளை இருக்கார் கூப்பிடு என்று அழைத்தார். அங்கு வந்திருந்த ஒருவரிடம் 'பேசு உன் உறவுதான்' என்றார். பேச்சின் முடிவில் என் கணவரின் அத்தையின் உறவினர் அவர் என்று தெரிந்தது. இப்படி நம்மிடம் சகஜமாக உரையாடியதையும், என் கணவரிடம் அவரே பணம் கேட்டு வாங்கியதையும் மறக்கவே முடியாது.

**Mrs.Chandra Venkataraman**
**5, Muthu Kalathi Street**





## *14)* பெரியவா தந்த மேருவும், மருந்தும்

**திருமதி பத்மா லக்ஷ்மி நாராயணன்**

*1963*ல் 'பெரியவா' காட்டுப்பள்ளியில் இருந்த சமயம் எங்களுடைய பிட்சை நடந்தது. எனக்கு அம்பாள் வைத்து பூஜை செய்ய ஆசையாக இருந்ததால் 'மேரு' வேண்டுமெனக் கேட்டுக்கொண்டேன் அதற்கு பெரியவா என் தாயாருக்கு மட்டும் கொடுத்துவிட்டு 'அம்மா குழந்தைகளை ஆசீர்வதிப்பா' என்று செல்லிவிட்டார். எனக்கு மிகவும் வருத்தம். என்னோடு வந்தவர்களுக்கும் வருத்தமாகதான் இருந்ததது. அப்போது

திடீரென்று ஒருவர் வந்து 'பெரியவா' கூப்பிடுவதாகக் கூறியதும் சென்றோம். நல்ல மேருவாக எடுத்து வரச் சொல்லி எனக்கும், மற்றவர்களுக்கும் கொடுத்தார். எங்களுக்கு மிகவும் சந்தோஷம். அவர் கையால் பிரசாதமாக வாங்கிய மேருவை அம்பாள் மாதிரி அலங்கரித்து பூஜை செய்து வருகிறேன். இன்றும் பெரிதாக வளர்ந்திருக்கிறது.

*1960* ஆம் வருஷம் என் பெரிய பெண்ணுக்குக் கழுத்தில் கட்டி வந்திருந்ததது. மருந்துகளால் குணம் ஆகவில்லை. டாக்டர் என்.கே.ஸ்ரீனிவாசன் அவர்கள், இராயப்பேட்டை மருத்துவமனையில் அவளுக்கு ஆப்ரேஷன் செய்ய நாள் குறித்திருந்தார். அந்த சமயம் 'பெரியவா' சமஸ்கிருதக் கல்லூரியில் தங்கியிருந்தார். குழந்தையையும் அழைத்துக் கொண்டு அவரை தரிசிக்கச் சென்றேன். என் வேதனையை அவரிடம் சொன்னேன். 'கட்டி எந்தப்பக்கம்? என்றார். 'வலது பக்கம்' என்று கவுனைக் கழற்றச் சொல்லி காண்பித்தேன். தன் கழுத்தை அதே பக்கம் தடவிக் கொண்டார். சாத்துக்குடி ஒன்று பிரசாதமாகக் கொடுத்தார். காலையில் கட்டி உடைந்து ரத்தமாகப் பெருகி வருகிறது. டாக்டரிடம் அழைத்துப் போனோம். முகமில்லாத (முளை) கட்டியிலிருந்து ரத்தம் வருவது கண்டு அவரே ஆச்சரியமடைந்தார். பதினைந்து நாட்களாக மருந்து கொடுத்தும், சிகிச்சை செய்தும், குணமாகாத நோய் 'பரமாச்சார்யாளின்' கடாக்ஷம் கிடைத்தவுடன் மாயமான விதத்தைப் பற்றி டாக்டரிடம் சொன்னேன். அனுபவபூர்வமாக எங்கள் கண் கண்ட தெய்வம் பரமாச்சார்யாள் என்பது நிதர்சனமான உண்மை.

**Mrs.Padma Laxminarayanan**
**10, Thandapani Street**
**T. Nagar**
**Madras 600 017**
**44 59 30**



## 15) மனநிலை தெளிந்தது

**திரு.லக்ஷ்மி நாராயணன்**

ஸ்ரீ காஞ்சி காமகோடி ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் என்னை 'ஹால்டா' என்று அழைப்பார்கள். காரணம் பல ஆண்டுகளாக நான் திய..கராயநகர், தண்டபாணி தெருவில் தட்டெழுத்து, சுருக்கெழுத்து பயிற்சிப் பள்ளியை நடத்துகிறேன். எங்கள் கண்கண்ட தெய்வம் பரமாச்சார்யாள் என்பதற்கு பிரத்யக்ஷமாக பல நிகழ்ச்சிகளைச் சொல்லலாமே!!

நாங்கள் நான்கு சகோதரர்கள், மூன்றாவது சகோதரனுக்கு சிறிது மனநிலை சரியில்லாமல் இருந்தது. என் தாய்க்கும் அதே போலிருந்தது. 1969 ஆம் ஆண்டு நடந்ததாக நினைவு. 'பெரியவாளிடம்' சென்று எங்கள் குடும்பத்தைப் பற்றி சொன்னோம். 'துர்மரணம் ஏற்பட்டிருந்தால் பரிகாரம் செய்யும் இடமான 'கூப்பகயா'வுக்குச் சென்று பரிகாரம் செய்யுங்கோ. அம்மாவை விட்டுடு, மூன்று பேராப் போங்கோ' என்றார். தாயாருக்கு வயதாகிவிட்டதால் விட்டுடு என்றார் என நினைத்து, நாலுபேர் நாங்கள் என்று சொல்லியும் மூவராகப் போகச் சொன்னாரே என்று மனதில் நினைத்துக் கொண்டே வந்துவிட்டோம். அன்றிலிருந்து இரண்டாம் மாதம் என் தாயார் இறந்துவிட்டார். என் சகோதரர்கள் இரண்டு பேர் டில்லியில் இருப்பதால் நானும், உடல்நலம் சரியில்லாத தம்பியுமாக க் கிளம்ப எண்ணி ரிசர்வ் செய்திருந்தோம். மறுநாள் கிளம்ப வேண்டும். முதல்நாள் நல்ல ஜுரம் தம்பிக்கு. சரி, சிறிது குணமானதும் அனுப்பிவை என்று சொல்லிவிட்டு நான் முதலில் டில்லி சென்று நான்கு நாட்கள் காத்திருந்தும் வராததால், நாங்கள் மூவரும் சென்று (பெரியவாள் வாக்கு பொய்யாகுமா?) பரிகாரம் செய்துவிட்டு வந்தோம். சென்னை திரும்பிய என்னை ஜுரம்

குணமான என் தம்பி வரவேற்க ஸ்டேஷனுக்கு வந்தான். அவனுக்கும் மனநிலை சரியாகிவிட்டது. இன்று நினைத்தாலும் அவரது பேரருளை எண்ணி வியக்கின்றோம். நடமாடும் தெய்வம் அவர் ஞான திருஷ்டியால் அவருக்குத் தெரியாதது ஏதுமில்லையே!

**Mr.Lakshmi Narayanan**
**10, Dhandapani Street**
**T. Nagar**
**Madras 600 017**



## *16)* பேச வைத்த தெய்வம்

**திருமதி விஜயலக்ஷ்மி கல்யாணம்**

எங்கள் குடும்பத்தில் கண்கண்ட தெய்வம் பரமாச்சார்யாள். அவரது பரிபூர்ண அருளும், அனுக்ரஹமும் என் மகனுக்குக் கிடைத்தது. நாங்கள் செய்த பூர்வஜென்ம புண்ணியமாகும்.

என் மகன் கிஷோருக்கு உடல்நலம் குன்றி fits வலிப்பு வந்தது. நன்றாகப் பேசிக் கொண்டிருந்த அவன் திடீரென்று பேசவே இல்லை. ஒன்றையும் புரிந்து கொள்ளாமல், பிரமை பிடித்தது போல இருந்தான் எட்டு வயதுதான் நிரம்பிய சின்னஞ்சிறு பாலகன், பள்ளிக்குச் சென்று வந்தவன். இதுபோன்ற நிலையில் இருப்பதைக் கண்டு நிலைகுலைந்து போனோம். எங்கள் 'கண்கண்ட தெய்வம்' பெரியவாளைத் தரிசித்துவிட்டு வரச் சென்ற வருடம் மே மாதம் காஞ்சிக்குச் சென்றோம். கூட்டமாக இருந்தது. 'பெரியவா'ளின் உதவியாளரிடம் நாங்கள் கல்கண்டு

ஒன்றைக் கொடுத்து அவர் மேல் வைத்துவிட்டாவது கொடுங்கள் என்று சொன்னோம். இதை கவனித்த 'பெரியவா' ஜாடையில் என்னவென்று கேட்க, எங்கள் மகனைப்பற்றி சொன்னோம். கல்கண்டைக் கையில் வாங்கி உருட்டிக் கொண்டே இருந்து சில நிமிடங்களில் அனுக்ரஹம் செய்து கொடுத்தார். ஊர் திரும்பினோம். ஆறே மாதங்களில் பேச ஆரம்பித்துவிட்டான். திரும்ப பெரியவாளை தரிசித்து குணமானதைக் கூறி மகிழச் சென்றோம். விஷயத்தை சொன்னதும் தன் கழுத்தில் இருந்த ஏலக்காய் மாலையை எடுத்துக் கொடுத்து என் மகனுக்குப் போடச் சொல்லி ஆசியும் வழங்கினார். என் வாழ்நாளில் மறக்க முடியுமா இவைகளை, ஈஸ்வர சொரூபம் அவர்!.

**Mrs.Vijayalakshmi Kalyanam**
**8, Moosa Street**
**T. Nagar**
**Madras 600 017**



## *17)* மூன்று பெரியவாளின் தரிசனம்

**திருமதி விஜயலக்ஷ்மி சந்திரமௌளி**

என் மாமியாருக்கு இரண்டு பெண்கள். மூன்றாவது முறை கர்ப்பமானபோது இதுவும் பெண்ணாகப் பிறந்து விடுமோ? என்று கவலைப்பட்டு அழுதாராம். பிரசவத்துக்கு முதல்நாள் 'பெரியவா' பிரசாதம் வந்ததாம். பிள்ளை பிறந்தால் 'சந்திரமௌளி' என்று பெயர் வைப்பதாக வேண்டிக் கொண்டாராம். என் கணவர் பிறந்ததும் அப்பெயரைச் சூட்டி மகிழ்ந்தார். எங்கள் குடும்பத்தின் பிரத்யக்ஷதெய்வம்

'பரமாச்சார்யாள்' தான். என் பாட்டி காந்திமதி என்கிற காந்தம்மாள் தியாகராயநகர் மாசிலாமணி தெருவில் குடியிருந்தார். மடத்தை சேர்ந்தச் அனைவருக்கும் பரிச்சயமானவர். காஞ்சியில் நவராத்திரியில் ஒருநாள் அபிஷேகம் அவருடையதுதான். வருஷத்துக்கு ஒரு நாள் பிட்சை. ஒரு பையனுக்கு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி அவர்களால் காஞ்சிக்கு வந்து போவோர் வசதிக்காகக் கட்டப்படும் கட்டிடம் ஒன்றில் அவர் பெயரில் ஓர் அறை கட்டிக் கொடுத்துள்ளார். 1984 ஆம் வருடம் என் பாட்டிக்கு எழுபத்தி ஆறு வயதானபோது உடல் நலம் சரியில்லாமல் இருந்தது. நடமாட்டம் குறைந்து போனது. பெரியவாளைத் தரிசிக்க விரும்பிய அவரை ஒரு வேன் வைத்து அழைத்துப் போனோம். 'ஸ்டெரெச்சரை' ஓர் இடத்தில் இறக்கி வைத்தபோது 'பரமாச்சார்யாளே' அருகில் வந்து தரிசனம் தந்தார். ஸ்ரீ ஜயேந்திரர், பாலசரஸ்வதி சுவாமிகளையும் வந்து பார்க்கச் சொல்லி ஆளை அனுப்பினார். மூன்று பெரியவாளையும் ஒருசேரப் பார்க்க கிடைத்த பாக்கியத்தை என்ன சொல்வது? "நீ சத்புத்ராளைப் பெற்றதால் மூன்று பேரையும் தரிசித்தாய்" என்று 'பெரியவா' சொன்னார். எங்கள் பாட்டி அதன்பிறகு நாலைந்து மாதங்களில் இறந்துவிட்டார். அவருக்குக் கிடைத்த பாக்கியத்தை எண்ணி நாங்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லயே இல்லை.

**Mrs.Vijayalakshmi Chandramouli,**
**10, Dhandapani Street**
**T. Nagar**
**Madras 600 017.**



# 18) பெரியவாளின் ஹாஸ்யம்

**திருமதி.ராஜலக்ஷ்மி**

'பெரியவா' ஹாஸ்யமாகப் பேசுவது வழக்கம். அதை நேரில் அனுபவித்த (சுஹானுபவத்தை) நாளை நினைவு கூர்கிறேன்.

சுமார் பதினைந்து வருடங்கள் இருக்கும். நாங்கள் திருவல்லிக்கேணியில் இருந்தோம். பதினைந்து பெண்களாகச் சேர்ந்து சௌந்தர்யலஹரி, அபிராமி அந்தாதி எல்லாம் கற்றுக்கொண்டு முடித்திருந்தோம். 'பெரியவா' சன்னதியில் பாட விரும்பினோம். காஞ்சிபுரம் சென்று முதலில் காமாட்சி அம்மன் கோயிலுக்குச் சென்று 'பெரியவா' பெயரில் அர்ச்சனை செய்து எடுத்துக் கொண்டு, கலவையில் தங்கியிருந்த 'பெரியவாளை'த் தரிசிக்கச் சென்றோம். காலை போய் சேரும்போது பதினோரு மணியாகிவிட்டது. நல்ல பசி. 'பெரியவா' எங்கள் எல்லோருக்கும் மோர் கொடுக்கச் சொன்னார். கற்றுக் கொண்ட பாடல்களைப் பாடிக் காட்டினோம். 'எல்லோரும் மோருஞ்சாதமாக சாப்பிட்டுப் போகட்டும். ஏற்பாடு செய்யுங்கள்' என்று உத்தரவிட்டார். இடைப்பட்ட நேரத்தில் மிகமிகத் தோழமையுடன் குழந்தை போல பேசினார். 'பெரியவா' கிட்ட பேசுகிறோம் என்ற பயமே எங்களுக்கில்லை. திடீரென்று அவர், 'பச்சைமா மலை போல் மேனி' என்பதற்கு அர்த்தம் தெரியுமா?' என்றார். 'தெரியாது' என்றதும் விளக்க ஆரம்பித்தார். 'ஒருவன் மிகப் பசியுடன் சாப்பிடச் சென்றான் கடைக்கு. கடைசிமாவை வழித்து கல், மண்ணுடன் பருமனாக வார்த்து வைத்திருந்த தோசை ஒன்று அதுவும் பாதி வெந்ததுதான் இருந்தது. வேறு வழியின்றி பசிக் கொடுமையால் தின்றான். அதைச் சாப்பிட்ட அவன் பச்சைமா (பச்சை மாவு) மலை போல் மேனி (கல் இருந்தது) பவள வாய் (கல்லைக் கடித்து பல்லில் ரத்தம் வந்தது) கமலச் செங்கண் (கோபத்திலும்,

ஆத்திரத்திலும் கண் சிவந்தது) அச்சுதா! இனி உன்னிடம் வரவே மாட்டேன் (கடைக்காரனிடம்) என்று கூறிச் சிரித்தார். சிரிப்பினிடையே உண்மை விளக்கமும் கூறினார். அவரது ஹாஸ்ய உரையாடல் இன்றும் என் காதில் ஒலிக்கின்றது. சுடச்சுட சாதம் வடித்து மோர்விட்டு, சிலர் கொண்டு வந்த உணவையும் பங்கிட்டு உண்டோம். தேவாம்ருதமாக இருந்தது. அந்த நாள் என் நெஞ்சில் என்றும் நிலைத்திருக்கும் நாள்.

**Mrs.Rajalakshmi**
**3B, Rangarajapuram**
**IIIrd Street,**
**Kodambakkam**
**Madras 600 024.**



## *19)* பெரியவா நடத்திய திருவிளையாடல்

**மன்னார்குடி எஸ்.கோபால கிருஷ்ண சாஸ்திரிகள்**
**(உபன்யாசகர்)**

'சங்கர ஜயந்தி' நூற்றாண்டு விழாவினை முன்னிட்டு தற்போது பல இடங்களில் ஆச்சார்யாளைப் பற்றியும், அவரது அனுபவங்கள்; அருளுரைகள் பற்றியும் நகரின் பல இடங்களில் உபந்நியாசம் செய்து வருகிறார். 'ராமகதா ரத்னம் ஸ்ரீமத் பாகவத தத்வ ப்ரதர்சக மன்னார்குடி பிரும்ம ஸ்ரீ எஸ். கோபால் கிருஷ்ணசாஸ்திரிகள்! பரமாச்சார்யாளின் 'வேத தர்ம சாஸ்த்திர பரிபாலன சபா'வின் உபந்யாசகர் என்ற பெருமையை உடையவர். பெரியவாளைப் பற்றி கேட்டவுடனே' நிறையச் சொல்கிறேனே! அதுதானே என் வேலை. அதைத்தானே நான் செய்து வருகிறேன்' என்றார் குதூகலத்துடன்.

1941 லிருந்து மகாபெரியவாளிடம் பழக்கம் இருந்து வருகிறது. 'பெரியவா' என்னை 'யத்வேதாதவ்' என்று செல்லமாக அழைப்பார். ஸ்மார்த்தா 'யோவேதாதவ்' சொல்லனும், வைஷ்ணவ பாடம், ஸ்மார்த்த பாடம்னு வேதத்துல பிரிவு கிடையாது. தேசத்தை அனுசரித்துதான் பாடங்களும். 'யோவேதாதவ்' ஆந்திரப்பாடம்; ஸ்மார்த்தர்களில் பெரும்பாலோர் ஆந்திராவிலிருந்து வந்தவர்கள். 'யத்வேதாதவ்' - திராவிட பாடம், தமிழ்நாட்டிலே இருந்தவர்கள் திராவிடர்கள். பெரும்பாலும் வைஷ்ணவர்களின் பாடசாலையில் நான் படித்ததால் திராவிட பாடத்தை அனுசரிப்பதால் 'பெரியவா' என்னை அப்படி அழைப்பார்கள்.

மதுரையில் காங்கிரஸ் மகாநாடு நடந்தது. நண்பர்களோடுப் போனேன். கீழச் சீவல்பட்டி அருகே மடத்துக் குதிரை வண்டி வந்து கொண்டிருந்தது. விசாரித்தபோது 'பெரியவா' 'இளையாத்தங்குடி'யில் முகாமிட்டிருந்தது தெரிந்தது. அங்கு தரிசிக்கச் சென்றோம். பழம், பாக்கு, வெற்றிலையுடன் 'பெரியவாளை'த் தரிசனம் செய்தபோது 'எங்கு வந்தீர்கள்?' என்று கேட்டார். கூட வந்த நண்பர் 'பெரியவாளை தரிசனம் பண்ண' என்றார். தீர்க்கதரிசியான பரமாச்சார்யாள், 'போகும் வழியாக இருக்கிறதல்லவா?' என்றதும், அதிர்ச்சியடைந்தார் நண்பர், பிறகு உட்கார வைத்து கீதையில் உள்ள பத்ரம், புஷ்பம், பலம், தோயம் என்ற ஸ்லோகத்துக்கு, பிட்சாவந்தனம் செய்ய அங்கு வந்திருந்த இருபது முப்பதுபேரிடம் கேட்டார். யாரும் பதில் சொல்லவில்லை நான் சொல்லத் துடித்தேன். கடைசியாக ஒருவாறு என்னைக்கேட்டதும், அவசரம், அவசரமாகச் சொல்லி முடித்தேன். சொல்லாதவர்களுக்கு எல்லாம் தலைகுனிவாகிவிட்டது. எனக்கு மிகவும் சந்தோஷம் அத்தனைபேர் அங்கு வருத்தப்பட்டுக் கொண்டிருக்கும்போது

நான் மட்டும் சந்தோஷப் படுவதைப் பார்த்து அவர்களையும் மகிழ்விக்க எண்ணிய 'பெரியவா' ஒரு திருவிளையாடலே நடத்தினார் அன்று. ஸ்லோகத்துக்குப் பொருள் கூறி முடிந்தவுடன் 'அசனம்' என்றால் என்ன? என்றார். 'கடித்து சாப்பிடும் பொருள்' என்றேன். நீ சொன்ன பொருள் பொருந்துமா? என்றார். 'பத்திரம் - இலை, புஷ்பம் மலர், பலம் - பழம், தோயம் - ஜலம். ஜலத்தைக் கடிக்க முடியுமா?' என்றார். நான் திகைத்தேன். தன் எதிரிலுள்ள ஓலைத்தட்டை இழுத்து நீ சொன்ன பொருள்களெல்லாம் இருக்காபார்' என்றார். இலைக்குத் துளசி மாலை, மலருக்குத் தாமரை, பழத்துக்கு மாம்பழம், ஜலம் இருக்கா?' 'இல்லை' யென்றேன். மற்றவர்கள் இப்போது உன்னிப்பாக (கவனம் சிதறாமல்) கவனித்தனர். பலமுறை நான் இல்லை என்றதும். தட்டிலுள்ள தேங்காயை எடுத்து 'ஜலம் இல்லையா'? என்றார். 'ஜலம் உள்ளே இருக்கு' என்றேன். 'இப்போ பொருள் சொல் ஜலத்தைக் கடிக்க முடியுமா?' என்றார். மற்ற எல்லோர் முகத்திலும் மகிழ்ச்சி பரவியது, 'உள்ளே உள்ள ஜலமானது ஜீவாத்மா, வெள்ளைநிற பரிசுத்தத் தேங்காய் பரமாத்மா. பரமாத்மாவின் அருகிலேயே இருக்கக் கூடிய இளநீராகிய ஜீவாத்மா பரமாத்மாவைக் காணுமே என்று உள்ளூர சஞ்சலப்பட்டு தவித்துக் கொண்டிருக்கிறது. பலநாள் தவித்து, தவித்து உடல் வற்றி சுருங்கி தேங்காயாகிய பரமாத்மாவுக்குள் சேர்ந்துவிடுகிறது, அந்தத் தேங்காயைக் கடித்துதானே சாப்பிடுகிறோம். இப்போ ஜலத்தைக் கடித்து சாப்பிட்ட உணர்வு ஏற்படுகிறதல்லவா? என்றார். 'அடடா! ஜீவாத்மா, பரமாத்மா ஐக்கியத்தை, வேதாந்த விஷயத்தை மிக எளிமையாக விளக்கினார் பெரியவா. இப்போதும் நான் உபந்யாசம் செய்யும்போது இந்த சம்பவத்தை, நிகழ்ச்சியைக் கூறும்போது மக்கள் மெய்சிலிர்க்கக் கேட்பார்கள். ஈஸ்வர

சேர்மனிடம் பேச எண்ணியபோது, அவரே பேசினார். "உன்னைப்போலவேலைசெய்பவர்களுக்கு இல்லாதவேலையா? உடனே சேர்ந்து விடு" என்றார். "கலகலப்பாகப் பேசும் **(Casual)** சுபாவம் இல்லாத அவரே நன்கு பேசியதற்குப் பரமாச்சார்யாள்தான் காரணம் என்றே நினைத்தேன். உடனே சேர்ந்தேன். நான் வேலைக்குச் சேர்ந்த இரண்டு வருடங்களில் அந்தத் தொழிலும் நலிவடைந்து கம்பெனியை மூடிவிட்டனர். சரியான சமயத்தில் 'பெரியவா' அனுக்கிரஹம் செய்துவிட்டார். இல்லாவிட்டால் இன்று என் நிலை என்ன? நினைத்தாலே நெஞ்சு பதைக்கின்றது. மிக மோசமான நிலைக்குத் தள்ளப்பட்டிருப்போம். எங்களை வாழவைத்த, வாழவைக்கின்ற நடமாடும் தெய்வம் அவர். 'கோட்டா' சாரதா என்று அன்புடன் என்னைக் குறிப்பிடுவார் 'பெரியவா'.

**Miss. Saradha Rao,**
**Dr. Besant Road,**
**5, Besant Road**
**Ice House,Triplicane**
**Madras - 5**



## *33)* கையைத்தூக்கி எனக்குமட்டும் ஆசியா"

**திருமதி. சுசீலா சுப்பிரமணியம் :**

'பெரியவாளைப் பார்க்க வேண்டும் என்று தோன்றினாலே போய் தரிசனம் செய்வது எங்கள் வழக்கம். அவர் கருணைக்கு எல்லையேது?. ஆறுமாதம் முன்பு 'கருணானந்த மண்டலி'யினரின் பிட்சை. அவர்களுடன் நானும் போயிருந்தேன். நாராயண சாஸ்திரிகளின் சிஷ்யர் கல்யாண சுந்தர சாஸ்திரிகள் (பாபு) ராமேஸ்வரத்தில் இருக்கிறார். அவர் வந்து காஞ்சிபுரம் போகிறேன் வாருங்கள் என்றவுடன் போய் தரிசிக்க எண்ணிக் கிளம்பினோம். நீண்ட வரிசையில்

காத்திருந்து அன்று தரிசனம் செய்தோம். படுத்துக் கொண்டிருந்தார் 'பெரியவா'. தரிசித்துவிட்டு நகர்ந்ததும் மனம் திருப்தியடையவில்லை. என்னைமட்டும் பார்த்து தனியாக ஆசிர்வதிக்கவில்லையே என்ற குறையுடன், திரும்பவும் வரிசையில் வந்தேன். அப்போது என் கண்களையே என்னால் நம்ப முடியவில்லை. என் உள் மனதில் ஆசை அவருக்கெப்படி தெரிந்தது? இதோ? என்னைமட்டும் நன்றாக நிமிர்ந்து பார்த்து, கையைத் தூக்கி ஆசி கூறினார் பரமாச்சார்யாள்? நடமாடும் தெய்வம், நம் எண்ணத்தை அறிந்து செயல்பட்ட பாக்கியம் என்னால் மறக்கவே முடியாத நாள் அது. அவர் இதைச் சொல்லும் போதே கண்களில் நீர் சொரிந்தது. பக்தனின் குரல் ஒலித்து பகவான் அருள்பாவிக்க நிகழ்ச்சியாயிற்றே!

**Mrs. Susila Subramanian**
**No.4, Raju Naicken St.,**
**West Mambalam,**
**Madras - 33**



# 34) குரு பூஜை

**திரு. சுப்பிரமணியம் (ஓய்வு பெற்ற ரயில்வே அதிகாரி)**

'பெரியவாளை' அடிக்கடி தரிசிக்கும் பாக்கியம் பெற்றவர்கள் நாங்கள். காசிக்கு 90 ஆம் வருடம் போய் அவரை அங்கு சென்று தரிசனம் செய்தோம். வியாழக்கிழமை குரு வாரம் என்பதால் குருவை தரிசித்த பிறகே போக விரும்பினோம். குரு தரிசனம் ஆனதும் காசி ராமேஸ்வரம் சென்று, சமாராதனையும் செய்து முடித்தோம். என் மகள் பாகிரதி சென்னைக்கு வந்தால் எல்லோரையும் போல சினிமா, நாடகம் பார்க்க விரும்ப மாட்டாள். காஞ்சிக்குப் போகவே விரும்புவாள். ஒருமுறை காஞ்சிக்குப் போனபோது பால பெரியவாளுக்கு உடம்பு சரியில்லை. ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் வெளியூர் சென்றுவிட, பரமாச்சார்யாள் நீண்ட வருடங்களுக்குப் பிறகு பூஜை செய்ததைக் காணக் கொடுத்து வைத்தவர்களானோம். மற்றொரு முறை 88 ம் வருடம் மூன்று 'பெரியவாளும்' பூஜை செய்கையில் காணக் கொடுத்து வைத்ததும் மறக்க முடியாதது. மடத்திலிருந்து வருபவர்களுக்கு என்றால் முடிந்த உதவிகளை செய்கிறேன். மனநிறைவாக இருக்கின்றது. எல்லாம் பெரியவாள் அனுக்கிரஹப்படிதான் நடக்கின்றது என்பது நிதர்சனமான உண்மை.

Mr. Subramanian,
4, Raju Naicken Street,
West Mambalam,
Madras 600 033.



## 35) பசுவும், கன்றும் தரச் சொன்னார்

### திருமதி லலிதா முத்து வீரப்பன்

நாங்கள் 'பிள்ளை' வகுப்பினராக இருந்தாலும் 'பரமாச்சார்யாள்' மீது தீவிர பக்தி உடையவர்கள். என் மகள் சாந்திக்குத் திருமணம் நிச்சயமானபோது மே 31 ந் தேதி அன்று, என் கணவர் 'பெரியவரிடம்' ஆசீர்வாதம் வாங்கச் சென்றார். பிள்ளையாருக்கு அர்ச்சனை செய்துவிட்டு இரண்டு மட்டைத் தேங்காய்களுடன் கல்யாணப் பத்திரிகையும் வைத்து ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளிடம் கொடுத்து, தரிசனம் செய்தார். வழக்கம் போல ஒரு மட்டைத் தேங்காயை திருப்பிக் கொடுப்பார் என்று நினைத்தால், தரவில்லை. எப்படிக் கேட்பது? என்று திரும்பிவிட்டார். பரமாச்சார்யாளை வெறும் பத்திரிகையை மட்டும் கொடுத்து தரிசித்தார். உள்ளேயிருந்து மட்டைத் தேங்காய் ஒன்றைக் கொண்டு வரச் சொல்லி ஆசிர்வதித்துக் கொடுத்தார். மனதைப் புரிந்து கொண்டு மகிழ்வித்த பெரியவாளை எப்படிப் புகழ்வது? உங்கள் வீட்டுப் பசு மாட்டைக் கன்றுக் குட்டியுடன் மடத்துக்குக் கொடுங்கள் என்று 'பரமாச்சார்யாள்' சொன்ன உடனே கொடுத்து விட்டோம். எந்த விஷயத்துக்கும் அவரது உத்தரவு கேட்டு நடப்பதுதான் எங்கள் வழக்கம் என்றார். என் கணவர் முத்து வீரப்பன் அவர்கள் சக்தி சுகர்ஸில் வேலையாக இருக்கிறார்.

Mrs. Lalitha Muthu Veerappan,
No.2, Velu Street,
West Mambalam,
Madras 600 033



# 36) நம்பிக்கை வீண்போகாது

திரு. மாத்ருபூதம்

கம்பெனி நிர்வாகிகளைத் தேர்ந்தெடுத்துக் கொடுக்கும் நிறுவனம் நடத்தும் எனக்கு 'பெரியவா'தான் குரு, தெய்வம் எல்லாம். அவரைப் பற்றி நிறைய சொல்லலாம். மனதிலே விடைதெரியாத குழப்பம் ஏற்படும்போது, அவரை ஒரு நிமிடம் நினைத்தால் போதும் வழி புலப்பட்டுவிடும்.

என் நெருங்கிய நண்பர் கடம்வித்வான் திரு. டி.ஹெச். விநாயகராம் அவர்களுக்கு பிரத்யஷயமாக 'பெரியவாளின்' அனுக்கிரஹம் கிடைத்த நிகழ்ச்சியை சொல்கிறேன். ஒரு முறை விநாயகராம் அவர்கள் அமெரிக்காவுக்கு நிகழ்ச்சி ஒன்றில் கலந்து கொள்ளச் சென்றார். மறுநாள் கச்சேரி. முதல் நாள் பானை உடைந்துவிட்டது. செய்வதறியாது திடுக்கிட்ட அவர், சென்னையிலுள்ள அவர் மனைவிக்கு போன் செய்து பரமாச்சார்யாளிடம் செய்தியைச் சொல்லச் சொன்னார். மனைவியும் காஞ்சிக்குத் தொடர்பு கொண்ட தில் 'நல்லா நடக்கும்' என்று ஆசிர்வதித்தார் 'பெரியவர்'. திரும்ப கணவர் போன் செய்ததும் 'பெரியவர்' ஆசி கூறியதை சொன்னார் அவர் மனைவி. இரவு முழுவதும் 'பெரியவாளை' நினைத்தே ஜபம் செய்து கொண்டிருந்தார் அவர். இடையே அவருடன் வாசிக்க வேண்டிய பம்பாய் தபலா வித்வான் திரு. ஜாகிர் உசேனுக்கு, விமான நிலையத் திலேயே கடம் உடைந்துவிட்ட செய்தி தெரிந்து அவருக்குத் தெரிந்தவரிடம் இருக்கும் 'கடத்தை' வாங்கச் சென்றார். அந்த நபரோ, இது என் சங்கீத ரசனைக்காக, மியூசிக் அகாடமியில் எனக்கு மிகவும் பிடித்த வித்வான் கொடுத் தது. பூஜைக்கு உகந்தது. அதை நான் தரமாட்டேன் என்று

கைவிரித்துவிட, வாசல்வரை வழியனுப்ப வந்தவர் காதில் 'விநாயகராமுக்கு இப்படி ஒரு சோதனையா?' என்று சொல்லியது விழுந்ததும் 'என்ன யார் என்று சொன்னீர்கள்? விநாயகராமா? அவர்தானே என் அபிமான வித்வான். அவர் கொடுத்த கடம்தானே இது. அவருக்கே நான் தருவது என் பாக்கியமல்லவா? எடுத்துச் செல்லுங்கள் என்று தந்தாராம். கச்சேரியில் கடைசியில் சந்தோஷத்துடன் கடத்தைத் தூக்கிப் போட்டு விநாயகராம் பிடித்த காட்சியை பிரபல ஆங்கிலப் பத்திரிகை செய்தியுடன் வெளியிட்டது. 'பெரியவர்' மீது முழு நம்பிக்கையும் வைத்துவிட்டால் அவர் நடத்திவிடுவார் என்பது என் நண்பரின் எண்ணம் மட்டுமல்ல என் எண்ணமும் அதுதான். இன்று நினைத்தாலும் மயிர் கூச்செரியும் அந்த நிகழ்ச்சியை நினைத்தால்.

Mr. Mathrubootham
14A, Jublee Road
West Mambalam
Madras 600 033.



## 37) பூணூல் திவ்யமா நடக்குமென்றார்

### திருமதி. லலிதாம்பாள் சுவாமிநாதன்

'பெரியவா'தான் எங்கள் கண்கண்ட தெய்வம் என்று நினைக்கும் குடும்பம் நாங்கள். எனக்கு இரண்டு பிள்ளைகள், ஒரு பெண். 1964 ஆம் ஆண்டு, 'பெரியவா' கச்சாலீஸ்வரர் அக்கிரஹாரத்துக்கு வந்து தங்கியிருந்தார். படுதா மறைவிலிருந்து வழக்கம் போல தீர்த்தம் கொடுத்தார். வாங்கிக் கொண்ட நான் கண்ணீர் வழிய, துக்கம் தொண்டையடைக்க, என் பிள்ளைகளுக்கு பூணூல் போட ஆசைப்படுவதாக சொன்னேன். காரணம் எங்கள் வம்சத்தில், குடும்பத்திலே பூணூல் போட்டால் 'ஆகி'வரவில்லையென்று, பெரி

யவர்கள் தடுத்ததால் எனக்கு வேதனை. 'திவ்யமா நடக்கும்' என்று ஆசிர்வதித்தார். 1966 ம் வருடம் இரண்டு பிள்ளைக ளுக்கும் சேர்த்து பூணூல் போட்டேன். அவர்களும் சௌக்கி யமாக இருக்கிறார்கள். என் மகளும் நல்லபடியாக இருக்கி றாள். எங்களுக்கும் இப்போது சஷ்டி அப்த பூர்த்தி நடந்து நல்லபடியாக இருக்கிறோம். எல்லாம் பரமாச்சாரியாளின் அனுக்கிரஹம்தான்.

Mrs. Lalithambal Swaminathan,
4, Kasi Viswanathar Koil Street,
West Mambalam,
Madras 600 033.



## 38) கர்மாவை அனுபவித்தே ஆகவேண்டும்

**திரு. டி. கணபதி**

'பக்த ஜன சபா' ஆரம்பித்து, பெரியவாள் சம்மந்தப் பட்ட வைபவங்கள், ஹோமங்கள், பூஜைகளை நடத்தி வருபவர். பெரியவாளின் 'சதாப்தி' வைபவத்தை முன் னிட்டு காசி விசுவநாதர் கோவிலில் (மேற்கு மாம்பலம்) பிரபல வித்வான்களைக் கொண்டு நல்ல பல நிகழ்ச்சிகளை நடத்தி, அன்னதானம் செய்பவர். 'பெரியவா'ளுடன் நெருங் கிய தொடர்புடையவர்.

1947, 48 ஆம் வருடம் தான் 'பெரியவா'ளுடன் நெருக்க மானேன். ஒரு வருடத்துக்கும் மேலாக எங்கள் ஊரான திருக்கோவிலூரின் அருகே 'பெரியவா' ஒரு கிராமத்தில் முகாமிட்டிருந்தார். நான் படித்துக் கொண்டிருந்தேன். 1949 ல் திருவிடைமருதூரில் இருந்த 'பெரியவா'ளிடம் போய் சேர்ந்தேன். நானும், திருக்கடுகாவூர் ராமமூர்த்தியும் திருப் பாவை, திருவெம்பாவை பாட, முதன் முதலில் ஆரம்பித்

தோம். விடியற்காலை மூன்று மணிக்கு, வீரசோழன் ஆற்றில் குளித்துவிட்டு, சந்திரமௌளி யானை மீது ஏறி, திருவிடைமருதூர் 'மகாலிங்க சுவாமி' கோயிலை நாற்புறமும் சுற்றி வந்து திருப்பாவை, திருவெம்பாவை இரண்டையும் 'பெரியவா' ஆக்ஞைப்படி பாடி முடித்து வருவோம். அதற்குக் கொஞ்ச காலம் கழித்துதான் இவற்றை பள்ளிகளிலும், மார்கழி மாத பஜனைகளிலும் பாட ஆரம்பித்தனர்.

'பரமாச்சார்யாள்' இரவு பன்னிரண்டு மணிக்கு மேல் முக்கியமான தினசரிப் பத்திரிகைகளை (தினமணி, ஹிந்து, எக்ஸ்பிரஸ் போன்ற) படித்துக் காட்டச் சொல்வார். உச்சரிப்பை கவனிப்பார். பல கோர்ட்டு விவகாரங்கள் வந்துள்ளதை விவாதிப்பார். படிக்கிறபோது வாயால் ஸ்ருதி சேர்ப்பார். படுத்துக்கொண்டே 'தம்' பிடித்து பானை போல உப்பிய வயிற்றை தட்டிக் காண்பித்து தாளம் போட்டு விளக்குவார். பிரபல வித்வான்களின் பாணிகளை வாசித்தும், வாயால் வீணை வாசித்தும் காண்பிப்பார். ஒருநாள் திருவிடைமருதூர், பச்சையப்ப முதலி அக்கிரஹாரத்து சிறு அறையில் டார்ச்சின் உதவியுடன் தினசரியைப் படித்துக் கொண்டிருந்தேன். திடீரென 'பெரியவா'ளிடமிருந்து சப்தமே இல்லை. வலி தாங்காமல் கை, கால் உதறுவதைக் கண்டேன். துடிக்கிறார். அவரது வலதுபக்க நெற்றி நரம்பு புடைத்துக் கொண்டிருந்தது. எனக்கு கைகால் ஓடவில்லை. ''இதுதான் கர்மா? தலையெழுத்து புரிகிறதா?'' என்றார். ''உங்களுக்கு ஏன்? ஜகத்குரு இல்லையா நீங்கள்?'' என்றேன். இன்னொரு டார்ச் ஒளியை கீழே அடிக்கச் சொன்னார். மாதுளம் பழத் தோல் ஒன்று கிடந்தது. ஓணான் மாதிரி தலையாட்டுவது போலத் தோன்றியது. ''மந்திர சக்தியை அதன் மீது ஆவாஹனம் செய்ததால் துடித்தது. மானிடனாக

வந்த நானும் கர்மாவை அனுபவித்துதான் ஆகணும்'' என்றார். அன்று ஏற்பட்ட அனுபவம் மிகமிகப் புதுமையானது.

Mr. T. Ganapathi,
22, Subba Chetty Street,
West Mambalam,
Madras 600 033.







## 39) கோவில் கட்டச் சொன்னார்

**திருமதி. ஜெயலக்ஷ்மி கணபதி**

1959-ல் என்னைப் பெண்பார்த்தார் என் கணவர். தன் தங்கைக்குக் கல்யாணம் செய்துவிட்டுதான் செய்து கொள்வேன் என்றார். 'நூம்பல்' என்ற இடத்தில் தங்கியிருந்த 'பெரியவாளை' என் அப்பா தரிசனம் செய்தபோது "முன்கோபக்காரன், பெட்டியத் தூக்குன்னா, தூக்கணும். இருந்தாலும் நன்னா இருப்பா" என்றாராம். அதுபோல 'பெரியவா' அனுக்கிரஹத்தால்தான் குடும்பம் நன்றாக இன்றளவும் நடக்கின்றது. என் கணவரின் தாத்தா மிராசுதார் சுந்தரேசய்யர். 'கொளத்தூரில் (தென் ஆற்காடு) கோவிலே இல்லை. என் மாமியாரும், நான்கு சகோதரர்களும் அவரைத் தரிசித்த போது கோவில் கட்டச் சொன்னாராம். அதன்படி பிள்ளையார் கோவில் கட்டியதும் என் கணவர் பிறந்ததால் கணபதி என்று பெயர் வைத்தனர். அந்தக் கோவிலைப் பராமரிக்க முடியாமல் பழுதடைந்திருந்தது. பூஜைகளும் நடக்கவில்லை அந்தக் கோவிலுக்கு என் கணவர் 'கேட்' போட்டுக் கொடுத்தார். சங்கராந்தி சமயம் அங்கு போய்ப் பார்த்து மாதம் ஐம்பது ரூபாய் அனுப்புவதாகவும் அணையாவிளக்கு அங்கு எரிய வேண்டும் என்றும் சொல்லிவிட்டு அனுப்ப ஆரம்பித்தார். பிறகுதான் மின்விளக்கே வந்தது. இங்கு என் மகனுக்கு நல்ல வேலை

கிடைத்தது. என் பெண்ணுக்கு நல்லபடியாகத் திருமணம் நடந்தது. கோவிலுக்கு விளக்கு ஏற்றுவது பற்றி பெரியவாளிடம் என் கணவர் சொன்னபோது, "நான் நினைத்தேன், நீ செய்துவிட்டாய்' என்று சொன்னாராம். என் கணவருக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது. எங்கள் குடும்பத்தினர் அனைவரும் பரமாச்சார்யாள் பக்தர்கள்தான். எங்களுக்கு எல்லாமே அவர்தான்.

**Mrs. Ganapathy**
**22, Subbareddy St.,**
**West Mambalam**
**Madras - 33**




## 40) பந்தி விசாரித்த பெரியவா

**திரு. விஜயராகவன்**

எங்கள் குடும்பம் பரமாச்சார்யாளுடன், மடத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்ட பாக்கியம் பெற்றவர்கள். அப்பா திரு. கணபதி 'பெரியவா' அருகிலேயே பலவருடங்கள் இருந்தவர். அடிக்கடி தரிசனம் செய்யவும் செல்வது வழக்கம். என் அப்பாவுக்கு 'சஷ்டி அப்த பூர்த்தி' வந்த போது மடத்தில்தான் இருந்தார். 'கல்யாணத்தை நான் நடத்தி வைக்கிறேன் ' என்றார் பெரியவா. எத்தனை மூட்டை அரிசி வேணும்? என்றார். எட்டு மூட்டைகள்தான் இருந்தது. காஞ்சியில் கங்காணிகள் அதிகம். அதனால் மடத்திலிருந்து அப்பா கல்யாணத்துக்காக முப்பத்தி இரண்டு மூட்டைகள் அரிசி தருமாறு கட்டளையிட்டார். சின்னக் காஞ்சிபுரம் திரு. டி. ஸ்ரீனிவாச ஐயங்கார், பள்ளத்தெருவில் இருந்த நூல்நிலையக் கட்டிடத்தை மடத்துக்குக் கொடுத்திருந்த சமயம் அது. என் பெற்றோரின் 'சஷ்டி அப்த பூர்த்தி'தான் முதலில் அங்கு நடந்தது. எழுநூறு பேர் ஒரே பந்தியில் சாப்பிடலாம். அன்று 'பெரியவா' பந்தி

நடக்கும்போது வந்து, குழந்தைகளுக்குப் பருப்பு வந்ததா? லாடு (லட்டு) வந்ததா? என்று சமிக்ஞையால் விசாரித்தார். நெய் கரண்டி முட்டையைக் காண்பித்தானா? நிஜமாக ஊத்தினானா? என்று பந்தி விசாரித்த ஓர் இனிய அனுபவம். கொடுத்து வைத்தவர்கள் ஆனோம் நாங்கள். எத்தனை பேருக்கு இந்த பாக்கியம் கிடைக்கும்!.

**Mr. Vijayaraghavan**
**22, Subba Reddy St.,**
**West Mambalam**
**Madras - 33**



## 41) பேசி மகிழ்ந்தேன்!

**திருமதி ஜானகி கே.சி. துரைசாமி**

பத்து வருடங்களுக்கு முன்பு, என் தந்தை நடத்திவரும் 'பக்த ஜனசபையின்' பிட்சை காஞ்சிபுரத்தில் நடக்க இருந்தது. நாங்கள் குடும்பத்துடன் போயிருந்தோம். காஞ்சி காமகோடி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி அவர்கள் மதுரா போயிருந்தார். எல்லோரும் அமர்ந்திருந்த சமயம், பரமாச்சார்யாள் சிறு பெண்ணான என்னிடம் "மடத்தில் இன்று எத்தனை பிட்சை?" என்றார். 'ஆறு பிட்சை' என்றேன். "எத்தனை பணம் கட்டினீர்கள்"? என்றதும், "மூவாயிரம் ரூபாயும், ஒரு மூட்டை அரிசி, காய்கறி, தேங்காய்" எல்லாம் கொண்டு வந்துள்ளதைச் சொன்னேன். "ஆறு பிட்சைக்கு பதினெட்டாயிரம் ரூபாயா? நான் பீடத்துக்கு வந்தபோது ஒரு அணா, ஒரு தேங்காய் கொண்டு வருவா. ஒரு காய் சாஸ்திர விரோதம்னு சொல்லி இரண்டு காய் கொண்டு வரச் சொல்லுவோம்" என்று சாமான்யர்களான எங்களுடன் ரொம்பவு. ம் casual ஆகப் பேசிக்கொண்டிருந்தார் அவரது முகதரிசனமாவது கிடைக்காதா என்று ஏங்குவோர் பலரிருக்க

எனக்கு இத்தனை பாக்கியமா? என்று மகிழ்ந்தேன். அந்நாளை மறக்கவே முடியாது.

Mrs.Janaki K.C. Duraiswamy
C/o. D. Ganapathy,
22, Subba Reddy St.,
West Mambalam
Madras - 33




## 42) தம்பியைக் கூப்பிடு

திரு. முத்துஸ்வாமி சர்மா

காஞ்சி மடத்துடன் தொடர்பு கொண்ட குடும்பமாதலால் நாங்கள் அடிக்கடி 'பெரியவாளை'த் தரிசிக்கப் போவோம். 1990-ம் வருஷம் என் தங்கை கல்யாணம் நிச்சயமானபோது, அப்பா, அம்மா, என் இரண்டு தம்பிகள், இரண்டு தங்கைகளுடன் நானும் என் மனைவியும் போனோம். என் தம்பி விஜயராகவன் கூச்ச சுபாவம், ஒதுங்கியே இருப்பான். அன்று நிறைய கூட்டம். அவன் எங்கோ ஒரு மூலையில் இருந்தான். அப்பாவைப் போலப் பட்டையாக விபூதி பூசிக் கொள்வான். நான் சிறு கோபி சந்தனமும், இன்னொரு தம்பி பெரிய அளவில் கோபி சந்தனமும் இட்டுக் கொள்வோம். தரிசனம் செய்து கொண்டே வரிசையாக வரும்போது அப்பா முறை வந்ததும், 'அப்பா விபூதி, பசங்க கோபியா?" அதோ பின்னாடி இருக்கிறவனைப் பாரு விபூதியோட" என்று எங்கோ இருந்த என் தம்பியைக் குறிப்பிட்டு சொன்னார். வெலவெலத்துப் போய்விட்டோம். தீர்க்கதரிசி ஆயிற்றே" அவர்.

**b)** தேனம்பாக்கத்தில் 'பெரியவா இருந்தபோது நானும் பம்பாயில் வேலை கிடைத்த அத்தைபிள்ளையும் தரிசிக்கச் சென்றோம். அப்போது ஒரு டாக்ஸி வந்தது. பிட்சை செய்ய வந்தவர்கள் அரிசி, பருப்பு, தேங்காயுடன் வந்தனர். மற்றொரு டாக்ஸி வந்தது. வெளிநாட்டுக்காரர் ஒருவர் வந்தார். நமஸ்கார

செய்தார். அவரது ஊர், தொழில், வந்த விபரம் அனைத்தும் பெரியவா கேட்டார். 'டெக்ஸ்டைல்ஸ்' தொழிலில் கூட்டாக இருந்த நம் ஊர்க்காரர் ஏமாற்றிவிட்டதாகவும், செய்வதறியாத நிலையில் யாரோ சொல்ல, ஸ்ரீ ஜயேந்திரரைத் தரிசித்ததாகவும், பணம் வந்துடும் என்றாராம் அவர். சிறிது நாளில் பணமும் கிடைத்துவிட்டதாம். பக்தியும், நம்பிக்கையும் இருப்பது அறிந்து இங்கு வந்தாராம். இரண்டரை மணி நேரம் பேசி, பிரசாதம் கொடுத்து ஆசிர்வதித்தார். 'ஜகத்குரு' என்று உலகே போற்றும் அவரை வெளிநாட்டுக்காரர் தரிசித்த சமயம் நான் அங்கிருந்து கவனித்துக் கொண்டேயிருந்தது மறக்கவே முடியவில்லை.

**Mr. Muthuswamy Sharma**
**22, Subba Reddy St.,**
**West Mambalam.**
**Madras - 33.**



## 43) உயிர் காத்தார்

**இருங்கூர் சுப்பிரமணிய ஐயர்**

என் மாமனார் 'மாம்பாக்கம் வரத கனபாடிகள்' காஞ்சி மடத்தில் வேதபாடசாலையில் வேதம் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தவர். எனக்கு இரயில்வே உத்தியோகம். காஞ்சியில்தான் என் கல்யாணம் நடந்தது. மடப்பள்ளியில் இருந்த நடேசய்யர், வரத கனபாடிகள் எல்லோருமே என் மனைவி பக்க உறவினர்கள். மடத்துடன் மிகவும் சம்மந்தப்பட்டவர்கள். ஆந்திரா ரயில்வேயில் இருந்து ரிடையர் ஆன சமயம் அனந்தப்பூரில் குடியிருந்தேன்.. அப்போது என் பக்கத்து வீட்டில் இருந்த ஐயர் ஒருவர் திருப்பதிக்குப் போனார். அங்கிருந்து காஞ்சிபுரம் சென்று பெரியவாளைத் தரிசிக்கச் சென்றார். அவர் ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தார். அவரை ஓர்

ஆளை அனுப்பி அழைக்கச் சொன்னார். 'பெரியவா' கூட்டமாக இருக்கிறதே தரிசனம் முடிந்து, ஆந்திரா செல்லும் பஸ் பிடிக்க நேரமாகிவடுமே என்று மனதில் நினைத்துக் கொண்டே அமர்ந்திருந்த அவரை, பரமாச்சார்யாளே அழைத்ததும் ரொம்ப சந்தோஷமடைந்தார் அவர்; தரிசனம் செய்து பிரசாதம் வாங்கிக் கொண்டதும் உத்தரவு கேட்டார். "உக்காரு போகலாம்" என்றார். இன்னும் அரைமணி நேரமே இருந்தது. மூன்று முறை உத்தரவு கேட்டும் கொடுக்கவில்லை. பிறகு தாமதமாக்கி, நேரம் கடந்ததும், அனந்தப்பூர் ஆஞ்சநேயர் கோவிலில் இதை சேர்த்துவிடு" என்று பிரசாதம் கொடுத்தனுப்பனார் பஸ் போய் விட்டதும் வேறு ஒரு பஸ் பிடித்து போகும் வழியில் பார்த்தால் இவர் போயிருக்க வேண்டிய பஸ்ஸும், காரும் மோதி விபத்து ஏற்பட்டிருந்ததைக் கண்டார். பெரியவாள் ஞான திருஷ்டியால் அறிந்து, தன் உயிரைக் காப்பாற்றிய நிகழ்ச்சியை என்னிடம் வியந்து பாராட்டிய என் நண்பருக்கு நடந்தது இது. நடமாடும் தெய்வம் அல்லவா அவர்?

**Mr. Irunkur Subramania Iyer**
**22, Subba Reddy Street**
**West Mambalam**
**Madras - 33**



## 44) இருதயநோய் அகன்றது

*திரு. வெங்கட்ராம ஐயர் (ஓய்வுபெற்ற இரயில்வே அதிகாரி)*

பரமாச்சார்யாள் பற்றி கேட்டால் எத்தனையோ நிகழ்ச்சிகளைச் சொல்லலாம். அவர் கருணைக்கு எல்லையேது? இரயில்வேயில் நான் வேலை பார்த்துக் கொண்டிருந்த சமயம்,

எங்கள் டிபார்ட்மெண்ட் டெபுடி ஜெனரல் மானேஜர் அவர்களுக்கு மிகவும் சீரியஸாக ஹார்ட் அட்டாக் வந்துவிட்டது. மருத்துவமனையில் அவசர சிகிச்சைப் பிரிவில் சேர்த்தனர். செட்டியார் வகுப்பைச் சேர்ந்த அவர் பரமாச்சார்யாளிடம் தீவிர பக்தி கொண்டவர். அவர் மனைவி காஞ்சிபுரம் போய் பெரியவாளைத் தரிசித்து வந்தார். ஒருநாள் விடியற்காலை ஆத்மபூஜை முடிந்து பெரியவாள் நிமிர்ந்த சமயம் அந்த அம்மாளைப் பார்த்தார். உயர் பதவியில் இருப்பவரின் வீட்டுப் பெண்மணி முக்கியமான காரணமாகத்தான் இத்தனை விடியலில் வந்திருக்கிறார் என்று தெரிந்து, சிஷ்யனை அழைத்துக் குங்குமம் கொண்டு வரச் சொல்லி, புடவைத் தலைப்பைக் காண்பிக்கச் சொல்லி அதில் போட்டுக் "சரியாகிவிடும்" என்றார். ஏழே நாட்களில் பூரண குணமாகி எழுந்த அவர் மீதியிருந்த மூன்று ஆண்டுகள் சர்வீஸையும் நல்ல முறையில் செய்து முடித்துதான் ரிடையர் ஆனார். அதன்பிறகு வெள்ளி, ஞாயிறு இரு தினங்களும், பெரியவாளைத் தவறாமல் தரிசித்து வந்தார். அவர் போக முடியாதபோது காஞ்சிபுரத்திலிருந்து இரண்டு பேர் வந்து காமாட்சி அம்மன் கோயில் பிரசாதத்தைக் கொண்டு வந்து கொடுப்பார்கள். காண்பவர்கள் அனைவரிடமும் 'பெரியவாளது' மகிமையையும் பேரருளையும்பற்றி அந்த உயர் அதிகாரி சொல்லாமல் இருந்ததே இல்லை.

**Mr. Venkatarama Iyer,**
**No. 1 Logaiah Naidu St.,**
**Sapthagiri, V.R.B. Flats**
**Saligramam**
**Madras - 93**



சேர்மனிடம் பேச எண்ணியபோது, அவரே பேசினார். "உன்னைப்போலவேலைசெய்பவர்களுக்கு இல்லாதவேலையா? உடனே சேர்ந்து விடு" என்றார். "கலகலப்பாகப் பேசும் (Casual) சுபாவம் இல்லாத அவரே நன்கு பேசியதற்குப் பரமாச்சார்யாள்தான் காரணம் என்றே நினைத்தேன். உடனே சேர்ந்தேன். நான் வேலைக்குச் சேர்ந்த இரண்டு வருடங்களில் அந்தத் தொழிலும் நலிவடைந்து கம்பெனியை மூடிவிட்டனர். சரியான சமயத்தில் 'பெரியவா' அனுக்கிரஹம் செய்துவிட்டார். இல்லாவிட்டால் இன்று என் நிலை என்ன? நினைத்தாலே நெஞ்சு பதைக்கின்றது. மிக மோசமான நிலைக்குத் தள்ளப்பட்டிருப்போம். எங்களை வாழவைத்த, வாழவைக்கின்ற நடமாடும் தெய்வம் அவர். 'கோட்டா' சாரதா என்று அன்புடன் என்னைக் குறிப்பிடுவார் 'பெரியவா'.

**Miss. Saradha Rao,**
**Dr. Besant Road,**
**5, Besant Road**
**Ice House,Triplicane**
**Madras - 5**



## 33) கையைத்தூக்கி எனக்குமட்டும் ஆசியா"

**திருமதி. சுசீலா சுப்பிரமணியம் :**

'பெரியவாளைப் பார்க்க வேண்டும் என்று தோன்றினாலே போய் தரிசனம் செய்வது எங்கள் வழக்கம். அவர் கருணைக்கு எல்லையேது?. ஆறுமாதம் முன்பு 'கருணானந்த மண்டலி'யினரின் பிட்சை. அவர்களுடன் நானும் போயிருந்தேன். நாராயண சாஸ்திரிகளின் சிஷ்யர் கல்யாண சுந்தர சாஸ்திரிகள் (பாபு) ராமேஸ்வரத்தில் இருக்கிறார். அவர் வந்து காஞ்சிபுரம் போகிறேன் வாருங்கள் என்றவுடன் போய் தரிசிக்க எண்ணிக் கிளம்பினோம். நீண்ட வரிசையில்

காத்திருந்து அன்று தரிசனம் செய்தோம். படுத்துக் கொண்டிருந்தார் 'பெரியவா'. தரிசித்துவிட்டு நகர்ந்ததும் மனம் திருப்தியடையவில்லை. என்னைமட்டும் பார்த்து தனியாக ஆசிர்வதிக்கவில்லையே என்ற குறையுடன், திரும்பவும் வரிசையில் வந்தேன். அப்போது என் கண்களையே என்னால் நம்ப முடியவில்லை. என் உள் மனதில் ஆசை அவருக்கெப்படி தெரிந்தது? இதோ? என்னைமட்டும் நன்றாக நிமிர்ந்து பார்த்து, கையைத் தூக்கி ஆசி கூறினார் பரமாச்சார்யாள்? நடமாடும் தெய்வம், நம் எண்ணத்தை அறிந்து செயல்பட்ட பாக்கியம் என்னால் மறக்கவே முடியாத நாள் அது. அவர் இதைச் சொல்லும் போதே கண்களில் நீர் சொரிந்தது. பக்தனின் குரல் ஒலித்து பகவான் அருள்பாவிக்க நிகழ்ச்சியாயிற்றே!

**Mrs. Susila Subramanian**
**No.4, Raju Naicken St.,**
**West Mambalam,**
**Madras - 33**





## 34) குரு பூஜை

**திரு. சுப்பிரமணியம் (ஓய்வு பெற்ற ரயில்வே அதிகாரி)**

'பெரியவாளை' அடிக்கடி தரிசிக்கும் பாக்கியம் பெற்றவர்கள் நாங்கள். காசிக்கு 90 ஆம் வருடம் போய் அவரை அங்கு சென்று தரிசனம் செய்தோம். வியாழக்கிழமை குரு வாரம் என்பதால் குருவை தரிசித்த பிறகே போக விரும்பினோம். குரு தரிசனம் ஆனதும் காசி ராமேஸ்வரம் சென்று, சமாராதனையும் செய்து முடித்தோம். என் மகள் பாகீரதி சென்னைக்கு வந்தால் எல்லோரையும் போல சினிமா, நாடகம் பார்க்க விரும்ப மாட்டாள். காஞ்சிக்குப் போகவே விரும்புவாள். ஒருமுறை காஞ்சிக்குப் போனபோது பால பெரியவாளுக்கு உடம்பு சரியில்லை. ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் வெளியூர் சென்றுவிட, பரமாச்சார்யாள் நீண்ட வருடங்களுக்குப் பிறகு பூஜை செய்ததைக் காணக் கொடுத்து வைத்தவர்களானோம். மற்றொரு முறை 88 ம் வருடம் மூன்று 'பெரியவாளும்' பூஜை செய்கையில் காணக் கொடுத்து வைத்ததும் மறக்க முடியாதது. மடத்திலிருந்து வருபவர்களுக்கு என்றால் முடிந்த உதவிகளை செய்கிறேன். மனநிறைவாக இருக்கின்றது. எல்லாம் பெரியவாள் அனுக்கிரஹப்படிதான் நடக்கின்றது என்பது நிதர்சனமான உண்மை.

Mr. Subramanian,
4, Raju Naicken Street,
West Mambalam,
Madras 600 033.



# 35) பசுவும், கன்றும் தரச் சொன்னார்

## திருமதி லலிதா முத்து வீரப்பன்

நாங்கள் 'பிள்ளை' வகுப்பினராக இருந்தாலும் 'பரமாச்சார்யாள்' மீது தீவிர பக்தி உடையவர்கள். என் மகள் சாந்திக்குத் திருமணம் நிச்சயமானபோது மே 31 ந் தேதி அன்று, என் கணவர் 'பெரியவரிடம்' ஆசீர்வாதம் வாங்கச் சென்றார். பிள்ளையாருக்கு அர்ச்சனை செய்துவிட்டு இரண்டு மட்டைத் தேங்காய்களுடன் கல்யாணப் பத்திரிகையும் வைத்து ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளிடம் கொடுத்து, தரிசனம் செய்தார். வழக்கம் போல ஒரு மட்டைத் தேங்காயை திருப்பிக் கொடுப்பார் என்று நினைத்தால், தரவில்லை. எப்படிக் கேட்பது? என்று திரும்பிவிட்டார். பரமாச்சார்யாளை வெறும் பத்திரிகையை மட்டும் கொடுத்து தரிசித்தார். உள்ளேயிருந்து மட்டைத் தேங்காய் ஒன்றைக் கொண்டு வரச் சொல்லி ஆசிர்வதித்துக் கொடுத்தார். மனதைப் புரிந்து கொண்டு மகிழ்வித்த பெரியவாளை எப்படிப் புகழ்வது? உங்கள் வீட்டுப் பசு மாட்டைக் கன்றுக் குட்டியுடன் மடத்துக்குக் கொடுங்கள் என்று 'பரமாச்சார்யாள்' சொன்ன உடனே கொடுத்து விட்டோம். எந்த விஷயத்துக்கும் அவரது உத்தரவு கேட்டு நடப்பதுதான் எங்கள் வழக்கம் என்றார். என் கணவர் முத்து வீரப்பன் அவர்கள் சக்தி சுகர்ஸில் வேலையாக இருக்கிறார்.

Mrs. Lalitha Muthu Veerappan,
No.2, Velu Street,
West Mambalam,
Madras 600 033



# 36) நம்பிக்கை வீண்போகாது

திரு. மாத்ருபூதம்

கம்பெனி நிர்வாகிகளைத் தேர்ந்தெடுத்துக் கொடுக்கும் நிறுவனம் நடத்தும் எனக்கு 'பெரியவா'தான் குரு, தெய்வம் எல்லாம். அவரைப் பற்றி நிறைய சொல்லலாம். மனதிலே விடைதெரியாத குழப்பம் ஏற்படும்போது, அவரை ஒரு நிமிடம் நினைத்தால் போதும் வழி புலப்பட்டுவிடும்.

என் நெருங்கிய நண்பர் கடம்வித்வான் திரு. டி.ஹெச். விநாயகராம் அவர்களுக்கு பிரத்யஷயமாக 'பெரியவாளின்' அனுக்கிரஹம் கிடைத்த நிகழ்ச்சியை சொல்கிறேன். ஒரு முறை விநாயகராம் அவர்கள் அமெரிக்காவுக்கு நிகழ்ச்சி ஒன்றில் கலந்து கொள்ளச் சென்றார். மறுநாள் கச்சேரி. முதல் நாள் பானை உடைந்துவிட்டது. செய்வதறியாது திடுக்கிட்ட அவர், சென்னையிலுள்ள அவர் மனைவிக்கு போன் செய்து பரமாச்சார்யாளிடம் செய்தியைச் சொல்லச் சொன்னார். மனைவியும் காஞ்சிக்குத் தொடர்பு கொண்ட தில் 'நல்லா நடக்கும்' என்று ஆசிர்வதித்தார் 'பெரியவர்'. திரும்ப கணவர் போன் செய்ததும் 'பெரியவர்' ஆசி கூறியதை சொன்னார் அவர் மனைவி. இரவு முழுவதும் 'பெரியவாளை' நினைத்தே ஜபம் செய்து கொண்டிருந்தார் அவர். இடையே அவருடன் வாசிக்க வேண்டிய பம்பாய் தபலா வித்வான் திரு. ஜாகிர் உசேனுக்கு, விமான நிலையத் திலேயே கடம் உடைந்துவிட்ட செய்தி தெரிந்து அவருக்குத் தெரிந்தவரிடம் இருக்கும் 'கடத்தை' வாங்கச் சென்றார். அந்த நபரோ, இது என் சங்கீத ரசனைக்காக, மியூசிக் அகாடமியில் எனக்கு மிகவும் பிடித்த வித்வான் கொடுத் தது. பூஜைக்கு உகந்தது. அதை நான் தரமாட்டேன் என்று

கைவிரித்துவிட, வாசல்வரை வழியனுப்ப வந்தவர் காதில் 'விநாயகராமுக்கு இப்படி ஒரு சோதனையா?' என்று சொல்லியது விழுந்ததும் 'என்ன யார் என்று சொன்னீர்கள்? விநாயகராமா? அவர்தானே என் அபிமான வித்வான். அவர் கொடுத்த கடம்தானே இது. அவருக்கே நான் தருவது என் பாக்கியமல்லவா? எடுத்துச் செல்லுங்கள் என்று தந்தாராம். கச்சேரியில் கடைசியில் சந்தோஷத்துடன் கடத்தைத் தூக்கிப் போட்டு விநாயகராம் பிடித்த காட்சியை பிரபல ஆங்கிலப் பத்திரிகை செய்தியுடன் வெளியிட்டது. 'பெரியவர்' மீது முழு நம்பிக்கையும் வைத்துவிட்டால் அவர் நடத்திவிடுவார் என்பது என் நண்பரின் எண்ணம் மட்டுமல்ல என் எண்ணமும் அதுதான். இன்று நினைத்தாலும் மயிர் கூச்செரியும் அந்த நிகழ்ச்சியை நினைத்தால்.

Mr. Mathrubootham
14A, Jublee Road
West Mambalam
Madras 600 033.



## 37) பூணூல் திவ்யமா நடக்குமென்றார்

திருமதி. லலிதாம்பாள் சுவாமிநாதன்

'பெரியவா'தான் எங்கள் கண்கண்ட தெய்வம் என்று நினைக்கும் குடும்பம் நாங்கள். எனக்கு இரண்டு பிள்ளைகள், ஒரு பெண். 1964 ஆம் ஆண்டு, 'பெரியவா' கச்சாலீஸ்வரர் அக்கிரஹாரத்துக்கு வந்து தங்கியிருந்தார். படுதா மறைவிலிருந்து வழக்கம் போல தீர்த்தம் கொடுத்தார். வாங்கிக் கொண்ட நான் கண்ணீர் வழிய, துக்கம் தொண்டையடைக்க, என் பிள்ளைகளுக்கு பூணூல் போட ஆசைப்படுவதாக சொன்னேன். காரணம் எங்கள் வம்சத்தில், குடும்பத்திலே பூணூல் போட்டால் 'ஆகி'வரவில்லையென்று, பெரி

யவர்கள் தடுத்ததால் எனக்கு வேதனை. 'திவ்யமா நடக்கும்' என்று ஆசிர்வதித்தார். 1966 ம் வருடம் இரண்டு பிள்ளைக ளுக்கும் சேர்த்து பூணூல் போட்டேன். அவர்களும் சௌக்கி யமாக இருக்கிறார்கள். என் மகளும் நல்லபடியாக இருக்கி றாள். எங்களுக்கும் இப்போது சஷ்டி அப்த பூர்த்தி நடந்து நல்லபடியாக இருக்கிறோம். எல்லாம் பரமாச்சாரியாளின் அனுக்கிரஹம்தான்.

Mrs. Lalithambal Swaminathan,
4, Kasi Viswanathar Koil Street,
West Mambalam,
Madras 600 033.



## 38) கர்மாவை அனுபவித்தே ஆகவேண்டும்

**திரு. டி. கணபதி**

'பக்த ஜன சபா' ஆரம்பித்து, பெரியவாள் சம்மந்தப் பட்ட வைபவங்கள், ஹோமங்கள், பூஜைகளை நடத்தி வருபவர். பெரியவாளின் 'சதாப்தி' வைபவத்தை முன் னிட்டு காசி விசுவநாதர் கோவிலில் (மேற்கு மாம்பலம்) பிரபல வித்வான்களைக் கொண்டு நல்ல பல நிகழ்ச்சிகளை நடத்தி, அன்னதானம் செய்பவர். 'பெரியவா'ளுடன் நெருங் கிய தொடர்புடையவர்.

1947, 48 ஆம் வருடம் தான் 'பெரியவா'ளுடன் நெருக்க மானேன். ஒரு வருடத்துக்கும் மேலாக எங்கள் ஊரான திருக்கோவிலூரின் அருகே 'பெரியவா' ஒரு கிராமத்தில் முகாமிட்டிருந்தார். நான் படித்துக் கொண்டிருந்தேன். 1949 ல் திருவிடைமருதூரில் இருந்த 'பெரியவா'ளிடம் போய் சேர்ந்தேன். நானும், திருக்கடுகாவூர் ராமமூர்த்தியும் திருப் பாவை, திருவெம்பாவை பாட, முதன் முதலில் ஆரம்பித்

தோம். விடியற்காலை மூன்று மணிக்கு, வீரசோழன் ஆற்றில் குளித்துவிட்டு, சந்திரமௌளி யானை மீது ஏறி, திருவிடைமருதூர் 'மகாலிங்க சுவாமி' கோயிலை நாற்புறமும் சுற்றி வந்து திருப்பாவை, திருவெம்பாவை இரண்டையும் 'பெரியவா' ஆக்ஞைப்படி பாடி முடித்து வருவோம். அதற்குக் கொஞ்ச காலம் கழித்துதான் இவற்றை பள்ளிகளிலும், மார்கழி மாத பஜனைகளிலும் பாட ஆரம்பித்தனர்.

'பரமாச்சார்யாள்' இரவு பன்னிரண்டு மணிக்கு மேல் முக்கியமான தினசரிப் பத்திரிகைகளை (தினமணி, ஹிந்து, எக்ஸ்பிரஸ் போன்ற) படித்துக் காட்டச் சொல்வார். உச்சரிப்பை கவனிப்பார். பல கோர்ட்டு விவகாரங்கள் வந்துள்ளதை விவாதிப்பார். படிக்கிறபோது வாயால் ஸ்ருதி சேர்ப்பார். படுத்துக்கொண்டே 'தம்' பிடித்து பானை போல உப்பிய வயிற்றை தட்டிக் காண்பித்து தாளம் போட்டு விளக்குவார். பிரபல வித்வான்களின் பாணிகளை வாசித்தும், வாயால் வீணை வாசித்தும் காண்பிப்பார். ஒருநாள் திருவிடைமருதூர், பச்சையப்ப முதலி அக்கிரஹாரத்து சிறு அறையில் டார்ச்சின் உதவியுடன் தினசரியைப் படித்துக் கொண்டிருந்தேன். திடீரென 'பெரியவா'ளிடமிருந்து சப்தமே இல்லை. வலி தாங்காமல் கை, கால் உதறுவதைக் கண்டேன். துடிக்கிறார். அவரது வலதுபக்க நெற்றி நரம்பு புடைத்துக் கொண்டிருந்தது. எனக்கு கைகால் ஓடவில்லை. ''இதுதான் கர்மா? தலையெழுத்து புரிகிறதா?'' என்றார். ''உங்களுக்கு ஏன்? ஜகத்குரு இல்லையா நீங்கள்?'' என்றேன். இன்னொரு டார்ச் ஒளியை கீழே அடிக்கச் சொன்னார். மாதுளம் பழத் தோல் ஒன்று கிடந்தது. ஓணான் மாதிரி தலையாட்டுவது போலத் தோன்றியது. ''மந்திர சக்தியை அதன் மீது ஆவாஹனம் செய்ததால் துடித்தது. மானிடனாக

வந்த நானும் கர்மாவை அனுபவித்துதான் ஆகணும்'' என்றார். அன்று ஏற்பட்ட அனுபவம் மிகமிகப் புதுமையானது.

Mr. T. Ganapathi,
22, Subba Chetty Street,
West Mambalam,
Madras 600 033.







## 39) கோவில் கட்டச் சொன்னார்

திருமதி. ஜெயலக்ஷ்மி கணபதி

1959-ல் என்னைப் பெண்பார்த்தார் என் கணவர். தன் தங்கைக்குக் கல்யாணம் செய்துவிட்டுதான் செய்து கொள்வேன் என்றார். 'நூர்ம்பல்' என்ற இடத்தில் தங்கியிருந்த 'பெரியவாளை' என் அப்பா தரிசனம் செய்தபோது "முன்கோபக்காரன், பெட்டியத் தூக்குன்னா, தூக்கணும். இருந்தாலும் நன்னா இருப்பா" என்றாராம். அதுபோல 'பெரியவா' அனுக்கிரஹத்தால்தான் குடும்பம் நன்றாக இன்றளவும் நடக்கின்றது. என் கணவரின் தாத்தா மிராசுதார் சுந்தரேசய்யர். 'கொளத்தூரில் (தென் ஆற்காடு) கோவிலே இல்லை. என் மாமியாரும், நான்கு சகோதரர்களும் அவரைத் தரிசித்த போது கோவில் கட்டச் சொன்னாராம். அதன்படி பிள்ளையார் கோவில் கட்டியதும் என் கணவர் பிறந்ததால் கணபதி என்று பெயர் வைத்தனர். அந்தக் கோவிலைப் பராமரிக்க முடியாமல் பழுதடைந்திருந்தது. பூஜைகளும் நடக்கவில்லை அந்தக் கோவிலுக்கு என் கணவர் 'கேட்' போட்டுக் கொடுத்தார். சங்கராந்தி சமயம் அங்கு போய்ப் பார்த்து மாதம் ஐம்பது ரூபாய் அனுப்புவதாகவும் அணையாவிளக்கு அங்கு எரிய வேண்டும் என்றும் சொல்லிவிட்டு அனுப்ப ஆரம்பித்தார். பிறகுதான் மின்விளக்கே வந்தது. இங்கு என் மகனுக்கு நல்ல வேலை

கிடைத்தது. என் பெண்ணுக்கு நல்லபடியாகத் திருமணம் நடந்தது. கோவிலுக்கு விளக்கு ஏற்றுவது பற்றி பெரியவாளிடம் என் கணவர் சொன்னபோது, "நான் நினைத்தேன், நீ செய்துவிட்டாய்' என்று சொன்னாராம். என் கணவருக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது. எங்கள் குடும்பத்தினர் அனைவரும் பரமாச்சார்யாள் பக்தர்கள்தான். எங்களுக்கு எல்லாமே அவர்தான்.

Mrs. Ganapathy
22, Subbareddy St.,
West Mambalam
Madras - 33




## 40) பந்தி விசாரித்த பெரியவா

**திரு. விஜயராகவன்**

எங்கள் குடும்பம் பரமாச்சார்யாளுடன், மடத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்ட பாக்கியம் பெற்றவர்கள். அப்பா திரு. கணபதி 'பெரியவா' அருகிலேயே பலவருடங்கள் இருந்தவர். அடிக்கடி தரிசனம் செய்யவும் செல்வது வழக்கம். என் அப்பாவுக்கு 'சஷ்டி அப்த பூர்த்தி' வந்த போது மடத்தில்தான் இருந்தார். 'கல்யாணத்தை நான் நடத்தி வைக்கிறேன் ' என்றார் பெரியவா. எத்தனை மூட்டை அரிசி வேணும்? என்றார். எட்டு மூட்டைகள்தான் இருந்தது. காஞ்சியில் கங்காணிகள் அதிகம். அதனால் மடத்திலிருந்து அப்பா கல்யாணத்துக்காக முப்பத்தி இரண்டு மூட்டைகள் அரிசி தருமாறு கட்டளையிட்டார். சின்னக் காஞ்சிபுரம் திரு. டி. ஸ்ரீனிவாச ஐயங்கார், பள்ளத்தெருவில் இருந்த நூல்நிலையக் கட்டிடத்தை மடத்துக்குக் கொடுத்திருந்த சமயம் அது. என் பெற்றோரின் 'சஷ்டி அப்த பூர்த்தி'தான் முதலில் அங்கு நடந்தது. எழுநூறு பேர் ஒரே பந்தியில் சாப்பிடலாம். அன்று 'பெரியவா' பந்தி

நடக்கும்போது வந்து, குழந்தைகளுக்குப் பருப்பு வந்ததா? லாடு (லட்டு) வந்ததா? என்று சமிக்ஞையால் விசாரித்தார். நெய் கரண்டி முட்டையைக் காண்பித்தானா? நிஜமாக ஊத்தினானா? என்று பந்தி விசாரித்த ஓர் இனிய அனுபவம் கொடுத்து வைத்தவர்கள் ஆனோம் நாங்கள். எத்தனை பேருக்கு இந்த பாக்கியம் கிடைக்கும்!.

**Mr. Vijayaraghavan**
**22, Subba Reddy St.,**
**West Mambalam**
**Madras - 33**



## *41)* பேசி மகிழ்ந்தேன்!

**திருமதி ஜானகி கே.சி. துரைசாமி**

பத்து வருடங்களுக்கு முன்பு, என் தந்தை நடத்திவரும் 'பக்த ஜனசபையின்' பிட்சை காஞ்சிபுரத்தில் நடக்க இருந்தது. நாங்கள் குடும்பத்துடன் போயிருந்தோம். காஞ்சி காமகோடி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி அவர்கள் மதுரா போயிருந்தார். எல்லோரும் அமர்ந்திருந்த சமயம், பரமாச்சார்யாள் சிறு பெண்ணான என்னிடம் "மடத்தில் இன்று எத்தனை பிட்சை?" என்றார். 'ஆறு பிட்சை' என்றேன். "எத்தனை பணம் கட்டினீர்கள்"? என்றதும், "மூவாயிரம் ரூபாயும், ஒரு மூட்டை அரிசி, காய்கறி, தேங்காய்" எல்லாம் கொண்டு வந்துள்ளதைச் சொன்னேன். "ஆறு பிட்சைக்கு பதினெட்டாயிரம் ரூபாயா? நான் பீடத்துக்கு வந்தபோது ஒரு அணா, ஒரு தேங்காய் கொண்டு வருவா. ஒரு காய் சாஸ்திர விரோதம்னு சொல்லி இரண்டு காய் கொண்டு வரச் சொல்லுவோம்" என்று சாமான்யர்களான எங்களுடன் ரொம்பவும் casual ஆகப் பேசிக்கொண்டிருந்தார் அவரது முகதரிசனமாவது கிடைக்காதா என்று ஏங்குவோர் பலரிருக்க

எனக்கு இத்தனை பாக்கியமா? என்று மகிழ்ந்தேன். அந்நாளை மறக்கவே முடியாது.

**Mrs.Janaki K.C. Duraiswamy**
**C/o. D. Ganapathy,**
**22, Subba Reddy St.,**
**West Mambalam**
**Madras - 33**



## 42) தம்பியைக் கூப்பிடு

திரு. முத்துஸ்வாமி சர்மா

காஞ்சி மடத்துடன் தொடர்பு கொண்ட குடும்பமாதலால் நாங்கள் அடிக்கடி 'பெரியவாளை'த் தரிசிக்கப் போவோம். 1990-ம் வருஷம் என் தங்கை கல்யாணம் நிச்சயமானபோது, அப்பா, அம்மா, என் இரண்டு தம்பிகள், இரண்டு தங்கைகளுடன் நானும் என் மனைவியும் போனோம். என் தம்பி விஜயராகவன் கூச்ச சுபாவம், ஒதுங்கியே இருப்பான். அன்று நிறைய கூட்டம். அவன் எங்கோ ஒரு மூலையில் இருந்தான். அப்பாவைப் போலப் பட்டையாக விபூதி பூசிக் கொள்வான். நான் சிறு கோபி சந்தனமும், இன்னொரு தம்பி பெரிய அளவில் கோபி சந்தனமும் இட்டுக் கொள்வோம். தரிசனம் செய்து கொண்டே வரிசையாக வரும்போது அப்பா முறை வந்ததும், 'அப்பா விபூதி, பசங்க கோபியா?" அதோ பின்னாடி இருக்கிறவனைப் பாரு விபூதியோட" என்று எங்கோ இருந்த என் தம்பியைக் குறிப்பிட்டு சொன்னார். வெலவெலத்துப் போய்விட்டோம். தீர்க்கதரிசி ஆயிற்றே" அவர்.

**b)** தேனம்பாக்கத்தில் 'பெரியவா இருந்தபோது நானும் பம்பாயில் வேலை கிடைத்த அத்தைபிள்ளையும் தரிசிக்கச் சென்றோம். அப்போது ஒரு டாக்ஸி வந்தது. பிட்சை செய்ய வந்தவர்கள் அரிசி, பருப்பு, தேங்காயுடன் வந்தனர். மற்றொரு டாக்ஸி வந்தது. வெளிநாட்டுக்காரர் ஒருவர் வந்தார். நமஸ்கார

செய்தார். அவரது ஊர், தொழில், வந்த விபரம் அனைத்தும் பெரியவா கேட்டார். 'டெக்ஸ்டைல்ஸ்' தொழிலில் கூட்டாக இருந்த நம் ஊர்க்காரர் ஏமாற்றிவிட்டதாகவும், செய்வதறியாத நிலையில் யாரோ சொல்ல, ஸ்ரீ ஜயேந்திரரைத் தரிசித்ததாகவும், பணம் வந்துடும் என்றாராம் அவர். சிறிது நாளில் பணமும் கிடைத்துவிட்டதாம். பக்தியும், நம்பிக்கையும் இருப்பது அறிந்து இங்கு வந்தாராம். இரண்டரை மணி நேரம் பேசி, பிரசாதம் கொடுத்து ஆசிர்வதித்தார். 'ஜகத்குரு' என்று உலகே போற்றும் அவரை வெளிநாட்டுக்காரர் தரிசித்த சமயம் நான் அங்கிருந்து கவனித்துக் கொண்டேயிருந்தது மறக்கவே முடியவில்லை.

**Mr. Muthuswamy Sharma**
**22, Subba Reddy St.,**
**West Mambalam.**
**Madras - 33.**



## 43) உயிர் காத்தார்

**இருங்கூர் சுப்பிரமணிய ஐயர்**

என் மாமனார் 'மாம்பாக்கம் வரத கனபாடிகள் காஞ்சி மடத்தில் வேதபாடசாலையில் வேதம் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தவர். எனக்கு இரயில்வே உத்தியோகம். காஞ்சியில்தான் என் கல்யாணம் நடந்தது. மடப்பள்ளியில் இருந்த நடேசய்யர், வரத கனபாடிகள் எல்லோருமே என் மனைவி பக்க உறவினர்கள். மடத்துடன் மிகவும் சம்மந்தப்பட்டவர்கள். ஆந்திரா ரயில்வேயில் இருந்து ரிடையர் ஆன சமயம் அனந்தப்பூரில் குடியிருந்தேன். அப்போது என் பக்கத்து வீட்டில் இருந்த ஐயர் ஒருவர் திருப்பதிக்குப் போனார். அங்கிருந்து காஞ்சிபுரம் சென்று பெரியவாளைத் தரிசிக்கச் சென்றார். அவர் ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தார். அவரை ஓர்

ஆளை அனுப்பி அழைக்கச் சொன்னார். 'பெரியவா' கூட்டமாக இருக்கிறதே தரிசனம் முடிந்து, ஆந்திரா செல்லும் பஸ் பிடிக்க நேரமாகிவடுமே என்று மனதில் நினைத்துக் கொண்டே அமர்ந்திருந்த அவரை, பரமாச்சார்யாளே அழைத்ததும் ரொம்ப சந்தோஷமடைந்தார் அவர்; தரிசனம் செய்து பிரசாதம் வாங்கிக் கொண்டதும் உத்தரவு கேட்டார். "உக்காரு போகலாம்" என்றார். இன்னும் அரைமணி நேரமே இருந்தது. மூன்று முறை உத்தரவு கேட்டும் கொடுக்கவில்லை. பிறகு தாமதமாக்கி, நேரம் கடந்ததும், அனந்தப்பூர் ஆஞ்சநேயர் கோவிலில் இதை சேர்த்துவிடு" என்று பிரசாதம் கொடுத்தனுப்பனார் பஸ் போய் விட்டதும் வேறு ஒரு பஸ் பிடித்து போகும் வழியில் பார்த்தால் இவர் போயிருக்க வேண்டிய பஸ்ஸும், காரும் மோதி விபத்து ஏற்பட்டிருந்ததைக் கண்டார். பெரியவாள் ஞான திருஷ்டியால் அறிந்து, தன் உயிரைக் காப்பாற்றிய நிகழ்ச்சியை என்னிடம் வியந்து பாராட்டிய என் நண்பருக்கு நடந்தது இது. நடமாடும் தெய்வம் அல்லவா அவர்?

**Mr. Irunkur Subramania Iyer**
**22, Subba Reddy Street**
**West Mambalam**
**Madras - 33**



## 44) இருதயநோய் அகன்றது

**திரு. வெங்கட்ராம ஐயர் (ஓய்வுபெற்ற இரயில்வே அதிகாரி)**

பரமாச்சார்யாள் பற்றி கேட்டால் எத்தனையோ நிகழ்ச்சிகளைச் சொல்லலாம். அவர் கருணைக்கு எல்லையேது? இரயில்வேயில் நான் வேலை பார்த்துக் கொண்டிருந்த சமயம்,

எங்கள் டிபார்ட்மெண்ட் டெபுடி ஜெனரல் மானேஜர் அவர்களுக்கு மிகவும் சீரியஸாக ஹார்ட் அட்டாக் வந்துவிட்டது. மருத்துவமனையில் அவசர சிகிச்சைப் பிரிவில் சேர்த்தனர். செட்டியார் வகுப்பைச் சேர்ந்த அவர் பரமாச்சார்யாளிடம் தீவிர பக்தி கொண்டவர். அவர் மனைவி காஞ்சிபுரம் போய் பெரியவாளைத் தரிசித்து வந்தார். ஒருநாள் விடியற்காலை ஆத்மபூஜை முடிந்து பெரியவாள் நிமிர்ந்த சமயம் அந்த அம்மாளைப் பார்த்தார். உயர் பதவியில் இருப்பவரின் வீட்டுப் பெண்மணி முக்கியமான காரணமாகத்தான் இத்தனை விடியலில் வந்திருக்கிறார் என்று தெரிந்து, சிஷ்யனை அழைத்துக் குங்குமம் கொண்டு வரச் சொல்லி, புடவைத் தலைப்பைக் காண்பிக்கச் சொல்லி அதில் போட்டுக் "சரியாகிவிடும்" என்றார். ஏழே நாட்களில் பூரண குணமாகி எழுந்த அவர் மீதியிருந்த மூன்று ஆண்டுகள் சர்வீஸையும் நல்ல முறையில் செய்து முடித்துதான் ரிடையர் ஆனார். அதன்பிறகு வெள்ளி, ஞாயிறு இரு தினங்களும், பெரியவாளைத் தவறாமல் தரிசித்து வந்தார். அவர் போக முடியாதபோது காஞ்சிபுரத்திலிருந்து இரண்டு பேர் வந்து காமாட்சி அம்மன் கோயில் பிரசாதத்தைக் கொண்டு வந்து கொடுப்பார்கள். காண்பவர்கள் அனைவரிடமும் 'பெரியவாளது' மகிமையையும் பேரருளையும்பற்றி அந்த உயர் அதிகாரி சொல்லாமல் இருந்ததே இல்லை.

**Mr. Venkatarama Iyer,**
**No. 1 Logaiah Naidu St.,**
**Sapthagiri, V.R.B. Flats**
**Saligramam**
**Madras - 93**



## 45) பெரியவாளின் தீர்க்கதரிசனம்

**திரு. ஜானகிராமன் (Chemplast நிறுவனத்தில் P.A. வாக வேலை செய்பவர்)**

என் தந்தை தன் சிறு வயதில் நடந்த நிகழ்ச்சி ஒன்றினை சொன்னது இப்போது ஞாபகம் வருகின்றது. என்பாட்டி ஒருமுறை சிதம்பரத்தில் முகாம் இட்டிருந்த 'பரமாச்சார்யாளைத்' தரிசிக்க என் அப்பாவுடன் சென்று அமர்ந்திருந்தாராம். அப்போது ஒரு தம்பதியினர் 'பெரியவா'ளுக்கு நமஸ்காரம் செய்துவிட்டு நிமிர்ந்தபோது, அருகிலிருந்த அவர்களது மகள் (சிறு பெண்) "பெரியவா மடியில் அமர்ந்துள்ள பெண் கட்டியிருப்பது போன்ற நீலக்கலர் பட்டுப் பாவாடை எனக்கு வேண்டும்" என்று சொல்லி அழுதாள். பெரியவா எதற்கு அழுகிறாள் என்று கேட்க அவர்களும் அப்படியே சொன்னார்கள். வேறு யார் கண்ணுக்கும் புலப்படவில்லை. 'பெரியவாளுக்குத்' தெரிந்து விட்டது. அம்பாள் தன்னுள் ஐக்கியமாகி இருப்பதை தன் அமானுஷ்ய சக்தியால் அறிந்துள்ள தெய்வீகக் குழந்தை அது. பகவானைத் தரிசித்த பாக்கியத்தால் மறுபிறவி இல்லாமல் முக்தி கிடைக்கும் குறைந்த ஆயுளை உள்ள அக்குழந்தைபற்றி அறிந்துகொண்டார். உடனே சிஷ்யரை அழைத்துப் பணம் கொடுத்து சிதம்பரம் ஹரிகிருஷ்ணா ஸ்டோரிலிருந்து நீலக்கலர் பட்டுப் பாவாடை வரவழைத்துக் கொடுத்தார். பிறகு மூன்று வருடங்களுக்குள் அக்குழந்தை இறந்துவிட்டது என்று பாட்டி மூலம் அறிந்து ஆச்சரியமடைந்தோம். கலியுகத்தின் கண்கண்ட தெய்வம் அவர். எப்பேர்பட்ட மகான்! அவர் வாழும் காலத்தில் நாம் வாழ்வதே ஒரு பாக்கியமல்லவா?



Mr. Janakiraman,
No. 1 Logaiah Naidu St.,
Sapthagiri, VRB Flats,
Saligramam, Madras - 93



## 46) வீடு கட்ட உதவு

### திருமதி. என். ஜெயம்

ஆறு வருடங்கள் முன்பு என் தங்கை, அவள் கணவருடன் தன் மகளுக்குக் கல்யாணம் ஆக வேண்டுமென்று 'பெரியவாளை'த் தரிசனம் செய்யச் சென்றார். "நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்?" படிப்பு வேலை எல்லாம் கேட்டார். கல்கத்தாவிலிருந்து வருவதாகவும் மற்ற விபரங்களையும் சொன்னார்கள். "நான் சொல்வதைச் செய்கிறாயா? உனக்கு முன்னாடி வந்தவா செங்கல்பட்டுக்காரா, ரொம்பக் கஷ்ட ஜீவனம். வீடுகட்ட உதவனும் செய்கிறாயா?" என்றார். வீடு முழுவதும் கட்டித் தர முடியாவிட்டாலும் முடிந்தவரை செய்கிறேன் என்று சொல்லிவிட்டு வந்தனர். பிறகு மடத்தில் விசாரித்து, செங்கல்பட்டு அருகே உள்ள ஒரு கிராமத்தில் இருந்த அவர்களது விலாசத்தைக் கண்டு பிடித்துப் பணம் அனுப்பினார். அந்தப் பணம் மிகவும் உதவியாக இருந்ததாக மனப்பூர்வமாக ஆசி கூறி, சந்தோஷத்துடன் பதில் எழுதினார்கள்; மறு வருடம் அதே மாதத்தில் பெண்ணுக்குத் திருமணமும் நடந்து அமெரிக்காவில் சந்தோஷமாக வாழ்ந்து கொண்டிருக்கிறாள்.



**Mrs. N. Jayam**
**99/3, Venkateswar Nagar**
**IInd Street, Virugambakkam**
**Madras - 92**

## 47) பெரியவாளின் சிரத்தை

### திருமதி. ரமா வெங்கட்ராமன்

என் கணவரின் அத்திம்பேர் ஒரு முறை காசி சங்கரமடத்தில் தங்க நேர்ந்தது. சில சாமான்களையும், காசிச் சொம்பில் கங்கை ஜலத்தையும் அங்குள்ளவர்கள் அவரிடம் கொடுத்து காஞ்சியில் உள்ள பரமாச்சார்யாளிடம் சேர்த்துவிடும்படி கூறினர்.

சாதாரணமாக கங்கைநீர் கொண்டு வந்ததும் வாங்கித் தன் பக்கத்தில் வைத்துக் கொள்ளும் 'பெரியவா' இவர் கொண்டு கொடுத்த ஜலத்தை வாங்கி உடனே தலையில் ஊத்திக் கொண்டதைப் பார்த்து மிக மிக சந்தோஷம் அடைந்தார். என் பெற்றோருடன் ஒருமுறை காஞ்சிக்குச் சென்றபோது 'பெரியவா' மௌன விரதம் அன்று. அங்குள்ள சாஸ்திரிகளுக்கு வேண்டியவர் ஒருவர் ஆய்வுக்கட்டுரை பேப்பர்களை கொண்டு வந்து அவரிடம் கொடுத்தார். தீபாராதனை வரை பேசாமல் இருந்த 'பெரியவா' மேலோட்டமாக அதைத் தொட்டுப் பார்த்து திருப்பிக் கொடுக்காமல், பக்கங்களை நிதானமாகப் புரட்டிப் பார்த்து ஆசி கூறியதும் கண்களில் நீர் வந்துவிட்டது அவரது சிரத்தையைப் பார்த்து. இதுபோல் அபூர்வமான சில பாக்கியங்கள் எல்லோருக்கும் கிடைக்காது. ஒரு சிலருக்குத்தான் கிடைக்கும்.

**Mrs. Rama Venkatesan**
**99/3, Venkateswara Nagar,**
**IInd St.,**
**Virugambakkam**
**Madras 92**




## *48)* கமலாம்பாள் சரித்திரம் எழுதினாலும் குடும்பமா?

திருமதி சரஸ்வதி ராமன்

'பெரியவர் மீது மிகுந்த பக்தியுள்ள குடும்பம் எங்களுடையது. *1872-1898* வரை வாழ்ந்த என் மாமனாரின் அண்ணா திரு. ராமய்யா சாஸ்திரி அவர்களின் முதல் பையன் திரு. பி. ஆர். ராஜம் ஐயர். முதல் தமிழ் நாவலான 'கமலாம்பாள் சரித்திரத்தை' எழுதியவர். மகாகவி பாரதியார், விவேகானந்தர் போன்றவர்களால் புகழப்பட்டவர். என் மாமியாருக்கு பெரியம்மா இவர் மனைவி. கடைசிவரை அவரை என் மாமனார்தான் பராமரித்தார். சிறு வயதிலேயே சந்நியாசியாகி

குடும்ப வாழ்க்கையில் ஈடுபடவில்லை. அதனால் திதி எதுவும் செய்வதில்லை. ஆராதனைதான் செய்யவேண்டும். என் கணவர் தன் அக்காவுடன் 55 ஆம் வருடம் 'பெரியவாளை'த் தரிசிக்கச் சென்றபோது "ராஜம் ஐயர் தம்பி பிள்ளையா நீ. கமலாம்பாள் சரித்திரத்தை எழுதினவராச்சே" என்று கேட்டதும் வியப்படைந்தனர். அவ்வளவு ஞாபகசக்தி மானுடனுக்கு இருக்க முடியுமா? தீர்க்கத்தரிசி அவர். வீட்டில் கல்யாணம், பூணூல் எல்லாவற்றுக்கும் உத்தரவு கேட்டு செய்வதுதான் வழக்கம்.

**Mrs. Saraswathi Raman,**
**5, M.G.R. Street,**
**Cauvery Ranga Nagar**
**Saligramam**
**Madras - 93**



## 49) நம் மனதைப் படிப்பவர்

*திரு. ஏ.கே. பார்த்தசாரதி (ஓய்வு பெற்ற வங்கி அதிகாரி)*

நான் 'யூகோ' வங்கியில் வேலையாய் இருந்தேன். 'பெரியவா'ல் மிக ஆழ்ந்த பக்தி கொண்டவன். பாட்னாவிலிருந்து றல் ஆகி '83 ம் வருடம் சீனியர் மானேஜராகப் பதவியேற்று ளைக்கு வந்தேன். பெரிய கிளை ஆபீஸ். இருநூறு பேரை வைத்து வேலை வாங்க வேண்டும். முதல்நாள் சீட்டில் போய் உட்கார்ந்ததும், 'பெரியவா' படம்தான் மேஜையில் கண்ணாடிக்டியில் இருந்தது. மனதுக்கு நல்ல சகுனமாகத் தெம்பாக இருந்தது. எ. ரவிதத் தொந்தரவும் இன்றி வேலை செய்தேன். திரும்ப அதே ஆபீஸில் வேறு ஒரு சீட்டில் உட்கார நேர்ந்தபோது, ஒரு வாடிக்கையாளர் மறுநாளே 'பெரியவா' போட்டோ ஒன்றைக் கொண்டுவந்து கொடுத்தார். ஆச்சரியமாக இருந்தது. மூன்று 'பெரியவாளை'யும் ஒன்றாக தரிசிக்க ஆசைப்பட்டு பெண்ணின் கல்யாணப் பத்திரிகையுடன்

போனபோது மனம்போல தரிசனம் கிடைத்தது. எனக்கு 'ராகவேந்திரர்' மீதும் ஆழ்ந்த பக்தியுண்டு. அதை ஞானதிருஷ்டியில் அறிந்தது போல பெரியவா அன்று பிரசாதம் கொடுப்பதைப் பிரித்ததும் அந்த பேப்பரில் சுவாமி 'ராகவேந்திரர்' மீது அமைந்துள்ள ஸ்லோகப் பேப்பர் அது. ஜாக்கிரதையாக வைத்துக் ாண்டேன். நம் மனதைப் படிப்பவர் பரமாச்சார்யாள் என்பது என்னைப் பொறுத்தவரை நிஜம்.

Mr. A.K. Parthasarathy
163, Plot No.
No. 1, M.G.R. St.,
Saligramam
Madras - 93



## 50) மனநோய் குறைந்தது

**திருமதி. அனுராதா (ஹைதராபாத்)**

எங்கள் குடும்பத்தினருக்கு 'பெரியவா' மீது தீவிர பக்தி உண்டு. என் அண்ணன் கல்லூரியில் படிக்கும் சமயம் சகவாசம் சரியில்லாமல், கண்டித்தும் என்ன சொல்லியும் கேட்காமல் முரட்டுத் தனமாக இருந்து கல்லூரிக்கு செல்வதையும் நிறுத்திவிட்டு வீட்டோடு இருந்தான். வீட்டுக்கு யார் வந்தாலும் அநாகரீகமாக சித்தப்பிரமை பிடித்தவன் போலக் கத்துவான். 89ம் வருடம் என் திருமணம் நடக்க இருந்த சமயம் அவனால் கல்யாணத்தில் ஏதேனும் பிரச்சினை வந்து அவமானம் ஏற்பட்டுவிடுமோ என்று பயந்தோம். 'பெரியவாளை'த் தரிசித்து கல்யாணம் பற்றி சொன்னதுடன், என் அண்ணனைப் பற்றியும் சொன்னோம். 'சரியாகிவிடும்' என்றார். பிரசாதம் கொடுத்தார். அன்று முதல் இன்று வரை கத்துவதே இல்லை. ஓரிடத்தில் அமைதியாக அமர்ந்து கொண்டிருக்கிறான். நிச்சயம் அவரது ஆசியால் போகப்போக நல்லபடியாக சரியாகிவிடுவான் என்ற நம்பிக்கை இருக்கிறது.

Mrs. Anuradha, Hyderabad

## 51) பெரியவாளின் பெயரை வைத்தேன்

*திருமதி. சங்கரி பாலசுப்பிரமணியம்*

என் அக்கா பரமாச்சார்யாளின் பரம பக்தை. அவருக்குத் திருமணம் தாமதமாக நடந்தது. எனக்கும் வயதாகிக் கொண்டே போகிறதே என்று கவலைப்பட்டுக்கொண்டிருந்தார். அப்போது நாங்கள் பெரம்பூரில் இருந்தோம். 'விவேகானந்தா ஹாலில்' பரமாச்சார்யாள் வந்து தங்கினார். என் அக்கா தரிசனம் செய்யச் சென்றபோது, இன்னும் இரண்டு மாதத்தில் என் தங்கைக்குக் கல்யாணம் ஆக வேண்டுமென மனதில் பிரார்த்தனை செய்து கொண்டாள். அத்தனை கூட்டம் இருந்தபோதும் அவளை அருகில் அழைத்து 'பெரியவா' முண்டக்கண்ணியம்மனுக்கு மாலை வாங்கிப் போடு. போ" என்று சொன்னார். அவரும் அஃத போல உடனே செய்தாள். எனக்கும் திருமணம் நிச்சயமாகியது. "சங்கர ஜயந்தி வைபவத்தைத் தொடர்ந்து பல ஆண்டுகளாக நடத்திக் கொண்டும், ஆன்மீக புத்தகங்களை வெளியிட்டுக் கொண்டும் இருக்கும் மறைந்த பி.டி. பாணி ஐயர் குடும்பத்து மருமகளாகவே நான் இருப்பது அவருக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது. நீண்ட காலமாகக் குழந்தை பிறக்காத போதும் என் அக்கா 'பெரியவாளை'த் தரிசித்து அனுக்கிரஹம் பெற்று, பிறகு அவருக்கு பிறந்த மகனுக்கு 'சங்கர்' என்று பெயர் வைத்திருக்கிறாள். எந்தக் குறை நமக்கு இருந்தாலும் 'பெரியவாளை' ஒருநிமிடம் நினைத்தால் போதும் அது பனிபோல தீர்ந்துவிடும் என்பாள்.

**Mrs. Shankari Balasubramaniam**
**37, Venkatachalam Chetty St.,Triplicane, Madras - 5**



## 52) பெரியவாதான் டாக்டர்

திரு. என். சுவாமிநாதன்

சிறு வயதிலிருந்தே பெரியவாளிடம் மிகவும் தீவிர பக்தியுடையவன் நான். 1967 லிருந்து 71 வரை சீரியஸாக நீரிழிவு நோயால் தாக்கப்பட்டு மிக க்ஷீணமாகிவிட்டேன். என் சகோதரியின் 9 வயது பெண் ஒரு நாள் என் வீட்டுக்கு வந்தபோது அவளுக்கு அம்மை நோய் வந்துவிட்டது. 'இன்பெக்ஷன்' ஆகிவிடும் என்று பயந்து அவளை வீட்டுக்கு அனுப்பிவிட்டேன். அவள் வீட்டுக்கு போனதும் அவள் மீது 'திருவேற்காடு கருமாரி அம்மன் வந்து என்னைப் பார்க்க விரும்பினாள் என்று அழைத்தனர். மாலை குளித்துவிட்டு சுத்தமாகச் சென்றேன். 'நிறைபாரமாய்' உடல் முழுவதும் முத்துக்களாக இருந்தது. "உன்னைப் பார்க்கத்தான் வந்தேன். நீ என்னை போ என்று சொல்லிவிட்டாயே" என்றாள். அவளை அப்படியே கட்டி அணைத்துக் கோண்டேன். "உனக்கு என்ன வேணும் கேளு" என்றதும் என் சர்க்கரை வியாதி பற்றி என் அம்மா சொன்னாள். "இனிமேல் நான்தான் டாக்டர். என் பிரசாதமான சாம்பலை சாப்பிட்டு வந்தால் போதும்" என்றாள். அதேபோல செய்து வந்தேன். என் பையனுக்கு சிறுநீரில் ரத்தம் வந்தது அதற்கும் சாம்பல்தான் மருந்து, பிறகு எனக்கு டி.பி. வந்துவிட்டது. பெரியவாளுக்கு லெட்டர் போட்டேன். "சாம்பலையும் சாப்பிடு. டாக்டரிடமும் போ" என்று பதில் வந்தது. மிக ஆபத்தான நிலையில் வந்த என்னைப் பார்த்து டாக்டர் கோபித்துக் கொண்டார். நுரையீரல் கூட்டிலே இரண்டு பக்கமும் ஒன்றுமே இல்லை. பெரியவாள் அனுமதி பெற்று வந்ததை சொன்னேன். 57 நாட்கள் அங்கு இருந்தேன். இருமிக் கொண்டே இருப்பேன். வேறு தொந்தரவில்லை. திரும்ப எக்ஸ்ரே எடுத்தபோது

இப்போது நார்மலாக இருந்தது. டாக்டரே ஆச்சரியப்பட்டு, இது மருந்தால் மட்டும் குணமாகவில்லை 'பெரியவா'தான் காப்பாற்றினார் என்றார். என் கண்கண்ட தெய்வம் அவர்.

**Mr. N. Swaminathan,**
**7, Mosque Street,**
**Triplicane,**
**Madras - 5**



## *53)* 'ராமநாமா' தொடர்ந்து எழுது என்றார்

**திருமதி. லலிதா மகாதேவன்**

என் மாமனார் திரு. கே.எம். சுப்பிரமணியம் அவர்கள் பரமாச்சார்யாளின் தீவிர பக்தர். 'ஸ்ரீ ராம ஜெயம்' கோடி நாமா எழுதும் நோட்டு போடுவதற்கு பெரியவாளிடம் அனுமதி வாங்கி வந்து அடித்துக் கொடுத்தார். அவருடன் நானும் போனேன். 'விடாம எழுது' என்று சொன்னார். அன்றிலிருந்து தொடர்ந்து ராம நாமா எழுதி பிரசாதம் பெற்று வருகிறேன். 'சங்கர ஜயந்தி' சமயம் தொடர்ந்து 25 வருடங்களாக சுவாசினியாக அமர்ந்து பூஜை செய்யும் பாக்கியம் பெற்றவளாக இருக்கிறேன். முடிந்த நன்கொடையும் தந்து வருகிறேன். என் நாத்தனார் திருமணம் நடக்க வேண்டியிருந்தது. கையில் பணமும் தட்டுப்பாடு. ஆனால் 'பெரியவாளை'த் தரிசித்த போது 'நிச்சயம் நடக்கும்' என்றார். அடுத்த 'சங்கர ஜயந்தி'க்குள் அவள் திருமணம் நடந்தது. என் மாமனார் ஒவ்வொரு வியாச பௌர்ணமி பூஜைக்கும் மடத்துக்குப் போவார். எழுதி முடித்து விட்ட ராமநாமாக்களுடன் நானும் போவேன். 'பெரியவா' நடமாடும் தெய்வம் கண்கண்ட தெய்வம் அவர்.

**Mrs. Lalitha Mahadevan**
**4, Pillayar Koil St., Ist Lane**
**Triplicane**
**Madras 5**

## 54) வீடு திரும்பிய மகன்

**திருமதி. கனகவல்லி - சேலம்**

*1988* ம் வருடம் சங்கர ஜயந்திக்கு மறுநாள் இருபத்தி மூன்று வயதான என் மகன் திடீரென்று காணாமல் போய்விட்டான். மனம் பதைக்க, என் சகோதரி லலிதாவுடன் நானும் காஞ்சிபுரம் சென்று 'பரமாச்சார்யாளை' தரிசித்து எங்கள் வேதனையைச் சொன்னோம். "நல்லபடியாக வந்து விடுவான்" என்றார். எருக்கம் பிள்ளையார் தந்தார். ஓரளவு சமாதானமடைந்து திரும்பி வந்தோம். தற்கொலை செய்துகொள்ளும் நோக்கத்துடன் போனவன் நான்கு நாட்களில் திரும்ப வந்துவிட்டான். இப்போது நல்லபடியாக இருக்கிறான். எல்லாம் பெரியவாளின் பேரருள்தான் காரணம்.

**Mrs. Kanagavalli,**
**C/o. Mrs. Lalitha**
**4, Pilliar Koil I Street**
**Triplicane, Madras - 5**



## 55) 'நாராயணா' எனும் நாமம்

**திருமதி. நிர்மலா ரமேஷ்**

என் மாமனார் வக்கீல் மகாதேவன் அவர்களின் சகோதரர் கோடம்பாக்கத்தில் இருக்கிறார். அவருக்கு திடீரென்று பக்கவாதம் வந்துவிட்டது. பேசவும் முடியவில்லை மருத்துவமனையில் அட்மிட் செய்தனர். பெரியவாளின் 'சங்கர ஜயந்தி' *3* ம் தேதி என்றால் அதற்கு ஒரு வாரம் முன்பு இது நடந்தது. பெரியவாள் சொன்னபடி 'நாராயணா' என்ற நாமத்தைச் சொல்லச் சொன்னோம். தொடர்ந்து முயற்சி செய்து உதடசைத்து சொல்ல ஆரம்பித்தார். என் மாமியார் பல வருடங்களாக சங்கர ஜயந்தி பூஜையில் சுவாசினியாக அமர்வது வழக்கம். ஆதலால் மிகவும் வேதனைப்பட்டார். பூஜைக்கு

இரண்டுநாட்கள் முன்பு அவருக்கு பேச்சும் வந்துவிட்டது. உடல்நலமும் ஓரளவு சரியானது. என் மாமியார் சந்தோஷமாக 'ஜயந்தி'யில் கலந்து கொண்டார். பெரியவாளை நினைத்தால் மலை போல வரும் தொல்லைகள் பனி போல் நீங்கிவிடுவது எங்கள் குடும்பத்தில் நிதர்சனமாக உணரும் உண்மை.

**Mrs. Nirmal Ramesh**
**4, Pillar Koil St.,**
**Ist Lane,**
**Triplicane**
**Madras - 5**



## 56) தங்கத் தேர்

**திருமதி உஷா சுந்தரம்**

என் தந்தை ஹைகோர்ட்டு வக்கீலாக இருக்கிறார். அவரது சகோதரரும் அங்குதான் வேலையாக இருக்கிறார். எங்களுக்கு பெரியவா மேல் தீவிர பக்தியுண்டு. அதிலும் அம்மாவுக்கு ரொம்பவும் ஆழ்ந்த பக்தி. எல்லாமே அவர்தான். ஒரு சமயம் மகாளய அமாவாசை அன்று தங்கத்தேருக்காகப் பணம் கட்டி, காஞ்சிக்கு கிளம்ப இருந்த சமயம் அம்மா மாம்பலத்தில் உள்ள குருமாமி வீட்டுக்கு போய்விட்டு வருவதற்குள், கோர்ட்டுக்கு போயிருந்த என் தந்தைக்கு சிறு விபத்து ஏற்பட்டு மயக்கம் போட்டு விழுந்துவிட்டார். யாரோ ஒருவர் முதலுதவி செய்து சோடா வாங்கிக் கொடுத்தார். அடையாளம் தெரிந்த சிலர் அவரது சகோதரரிடம் சென்று சொல்லி வீட்டுக்கு அழைத்து வந்தனர். குருமாமி வீட்டிலிருந்து வந்த அம்மா பதறிவிட்டாள். நல்ல அடி. சிராய்ப்புகள் இருந்தும், பெரியவாள் மீது அம்மா வைத்துள்ள பக்தியாலும், தங்கத்தேர் இழுத்து காணிக்கை செலுத்த வேண்டிய கட்டாயத்தாலும் நாங்கள் அம்மாவை காஞ்சிக்கு

அனுப்பி வைத்தோம். தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போனது 'பெரியவா' அனுக்ரஹத்தால்தானே!

**Mrs. Usha Sundaram**
**25, Akbar Sahib St.,**
**Triplicane, Madras - 5**



## 57) பருப்புத் தேங்காயும், பட்சணங்களும்

**திரு வரதன் என்கிற கிருஷ்ணமூர்த்தி**

பெரியவாளுடன் கூட இருபத்தி இரண்டு வருடங்களாக இருக்கிறேன். அவர் இட்ட வேலைகளை செய்து முடிப்பேன். 1964 ம் ஆண்டு 'குமாரமங்கலத்துக்கு 'பெரியவா' பல்லக்கில் வந்து சேர்ந்த போது "வரதா, விடிகாலை மூன்று மணிக்கு உன் முகத்தில் விழித்துள்ளேன். தான்யம் கொண்டு வரயா"ன்னார். உடனே ஏழு லாரிதான்யம் கொண்டு வர ஏற்பாடு செய்தேன். பெரியவா மீது கவி பாடினேன். அப்பாக்குட்டி சாஸ்திரிகள் 'பெரியவாளிடம் இவன் ஐந்தாவதுதானே படித்தான் எப்படி கவி பாடறான்" என்று கேட்டதற்கு "தான தர்மம் செய்த பரம்பரையில் வந்தவன் கிருஷ்ண பிரேமியின் (பிரபல ஹரிகதா காலட்சேபம் செய்பவர்) சகோதரன் மூன்று வயசிலிருந்து மடத்துல இருக்கிறான். அவன் பாடறதுக்கு என்ன?" என்று பதில் சொன்னார்.

மடத்துப் பாடசாலை குழந்தைகளுக்கு பத்தொன்பது வருடங்களாக 'பெரியவா' இட்ட உத்தரவுப்படி இனிப்பு செய்து அனுப்புகிறேன் 'சங்கர ஜெயந்தி' வைபவத்துக்கு 108 சுவாசினிகளை உட்கார வைத்து சொந்த செலவில் காஞ்சியில் பூஜை செய்கிறேன். மடத்தில் வேதபுரி என்று இருப்பவர் பையனுக்கும், நங்கநல்லூர் சாம வேத சாஸ்திரிகள் பெண்ணுக்கும் திருமணம் 'பெரியவா' நிச்சயித்து நடந்தது. "ஏழை சந்நியாசி நடத்தி வைக்கும் இந்தக் கல்யாணத்துக்கு ஐந்து

வகை இனிப்பு, பட்சணங்கள், பருப்புத் தேங்காய் எல்லாம் கொண்டு வர முடியுமா வரதா" என்றார். "உத்தரவு போடுங்கள் உடனே செய்கிறேன்" என்று ஒரே ராத்திரியில் செய்து அனுப்பி வைத்தேன். அவரால் வளர்க்கப்பட்டு இன்று ஒரு மனிதனாக வாழ்கிறேன் என் பாக்கியம் அது.

### b) பெரியவாளின் அன்னதானம்

ராமேஸ்வரத்தில் வெள்ளம் வந்து கோடிக்கரை (தனுஷ்கோடி) தனியாகப் பிரியப் போகிறது என்பதை ஞான திருஷ்டியால் அறிந்த மகான் அவர். ஒரு வருடம் முன்பே ராமேஸ்வரம் சங்கரமடத்துக்கு வரும் பணக்காரர்கள், பெரிய மனிதர்களிடம் நெய், கோதுமை, மாவு, அரிசி என்று சாமான்கள் சேகரித்து வைக்க இடமில்லாமல் கொட்டகை போட்டு வைத்தார். வெள்ளம் வந்ததும் ஜாதி, மத. பேதமின்றி அனைவருக்கும் அன்னதானம் செய்யச் சொன்னக் கருணை வள்ளல், தெய்வ மகான் அவர்.

**Mr. Krishnamurthy**
**13, Thoppu St.,**
**Triplicane**
**Madras 5**



## 58) அழுகாத பழங்கள்

### திருமதி ருக்மணி கிருஷ்ண மூர்த்தி

என் கணவர் மடத்திலேயே வளர்ந்தவராதலால் பரமாச்சார்யாளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டவர். அவர் காலால் இட்ட கட்டளையைத் தலையால் செய்பவர். அதில்

சந்தோஷம் காண்பவர். *1987* ம் வருடம், யூனியன் மோட்டார்ஸ் முத்துக் கிருஷ்ணன் அவர்கள் ஸ்ரீ ராம நவமிக்காக இரண்டு தார் வாழைப் பழங்களை 'பெரியவா'ளிடம் கொடுத்தார். என் கணவரை அழைத்து எத்தனை பழங்கள் தாரில் உள்ளன என்று எண்ணச் சொன்னார் பெரியவாள். ஒரு தாரில் *275* ம், மற்றொன்றில் *375*ம் இருந்தது. ஒரே தாரில் *1008* பழங்கள் பார்த்திருக்கிறாயா? என்று கேட்டார் பெரியவா. "உத்தரவு கொடுங்கள் எங்கு இருந்தாலும் கொண்டுவந்து தருகிறேன்" என்றார் என் கணவர். "இளையாத்தங்குடி" மாரியம்மனை தரிசித்தால் தெரியும்" என்றார். குடும்பத்தோடு அங்கு சென்று மாரியம்மனைத் தரிசித்தபோது அங்குள்ள ஒருவர் மூலம் தெற்கேயுள்ள தோட்டத்தில் இருப்பதாகத் தெரிந்தது. ரூ *30*/- கொடுத்து வாங்கி வந்தோம். 'பெரியவாளிடம் கொடுத்ததும் எத்தனை நாள் இருக்கும்? விஷ்ணுவுக்கு குருவாயூர் கோவிலுக்கு அனுப்புங்கள் என்றார். மற்றவர்கள் எல்லோரும் அதற்குள் அழுகிவிடும் இன்னும் பதினான்கு நாட்கள் உள்ளதே என்றனர். 'பெரியவா' உத்தரவு போட்டால் அழுகாது" என்று என் கணவர் சொன்னதும் 'விஷ்ணுவுக்கு அனுப்பு' என்றார். பதினான்காம் நாள் ஒரு பழம் கூட அழுகாமல் குருவாயூர் கோவிலுக்கு அனுப்பி வைத்தார் என் கணவர். தீர்க்கதரிசி அல்லவா பரமாச்சார்யாள். என் கணவர் இதை எல்லோரிடமும் சொல்லி மகிழ்வார்.

**Mrs. Rukmani Krishnamurthy,**
**13, Thoppu Street,**
**Triplicane,**
**Madras - 5.**



பிரசாதத்தை அவர் என்னிடம் கொடுத்த காரணம் இப்போது புரிந்துவிட்டது. வீட்டுக்கு வந்து ஒரு வாரம் என் பெண்ணுக்கு அதை தினமும் இட்டேன். ஜுரம் தேவலையானதோடு ஒரு மாதம் பள்ளிக்குச் செல்லாமல் இருந்த நிலையிலும் பத்தாம் வகுப்பில் பள்ளி முதல் மாணவியாக வந்தாள். சமஸ்கிருதத்தில் *100%* எடுத்தாள். ஓராயிரம் இது போல் சொல்லாம். நா போதாது. அவரது பேரருளுக்கு ஈடு இணையே கிடையாது.

**Mr. N. Subramaniam**
**11, Ist Street**
**South Gopalapuram Madras**
**Ph : 8272516**



## 59) புகையில் கண்டம்

**திருமதி லக்ஷ்மி சுந்தரம்**

என் தந்தை சாத்தூர் திரு. சுப்பிரமணியம் அவர்கள் பிரபல கர்நாடக சங்கீத வித்வான். சுமார் நாற்பது வருடங்கள் முன்பு என் பாட்டி திருச்சியிலிருந்து காஞ்சிபுரம் வந்து வழக்கம் போல பரமாச்சார்யாளைத் தரிசனம் செய்தார். அப்போது என் தந்தை டில்லிக்கு, கச்சேரி செய்யச் சென்றிருந்தார். நண்பர் வீட்டில் தங்கியிருந்தார். அவர்கள் வீட்டில் பாத்ரூமில் குளிக்கச் சென்றபோது, நிலக்கரி அடுப்பு எரிந்து கொண்டிருந்தது. என் தந்தை கதவைத் தாளிட்டுக் குளிக்க ஆரம்பித்த போது புகை சூழ்ந்து கொண்டு மூச்சுத் திணறி மயக்கமடைந்து விழுந்துவிட்டார். அதே சமயம் அதே நேரத்தில் 'பெரியவா' "உன் பிள்ளை நன்றாக இருப்பான்" என்று பாட்டியிடம் பிரசாதம் வழங்கி ஆசி கூறினார். இங்கே அதே நேரம் தற்செயலாக குளியல் அறையை கவனித்த நண்பர் கதவை உடைத்து என் தந்தையின் உயிரைக் காப்பாற்றினார். பாட்டி அடிக்கடி இதை எங்களிடம் சொல்வார். என் மகனைக் காப்பாற்றியது அந்த மகான்தான் என்பார். கண்கண்ட தெய்வம் அவர் என்று போற்றுவார்.

**Mrs. Lakshmi Sundaram**
**95, Patel Road**
**Perambur**
**Madras - 11**



## 60) மறுபிறவிதான் இது!

**திருமதி ஜெயலக்ஷ்மி அம்மாள்**

என் கணவர் சாத்தூர் சுப்பிரமணியம் (கர்நாடக இசைக்கலைஞர்) அவர்கள் 77 ம் வருடம் உடல் நிலை

சரியில்லாமல் படுத்திருந்தார். 61 வயது அப்போது அவருக்கு ஆகியிருந்தது. திருச்சியில் இருந்தோம். 'பெரியவா' திருச்சி தென்னூர் ரோடு வழியாக நடந்து போன சமயம் என் கணவர் படுத்திருப்பதை அறிந்து "பார்க்க வேண்டிய மனுஷாளாயிற்றே!" என்று சொன்னபடி வீட்டுக்குள் வந்தார். ஒரு நிமிடம் நின்று பார்த்துவிட்டு "இந்த அம்மாள் இருக்கிறாளே" என்று சொல்லியபடி சென்றுவிட்டார். பெரியவாளே உள்ளே வந்து தரிசனம் தந்தாலும், அவர் கால் பட்டதாலும் என் கணவர் பிழைத்து விடுவார் என்று நப்பாசைப் பட்டேன். தீர்க்கத்தரிசி போல் 'இவள் இருக்கிறாளே' என்று சொன்னதன் அர்த்தம் பிறகுதான் விளங்கியது. என் கணவர் இறந்துவிட்டார். தெய்வவாக்கு பொய்யாகாது அல்லவா?.

**b) 1986** ம் வருஷம் டில்லியில் என் மகன் வீட்டில் நான் இருந்தபோது பக்கத்து வீட்டு சிநேகிதியுடன் கதை கேட்கப் போனேன். எங்கள் மீது கார் மோதி தலையில் பலத்த அடிபட்டு **Blood Clot** ஆகிவிட்டதால் பிழைக்க மாட்டேன் என்று கைவிரித்துவிட்டனர் டாக்டர்கள். தலையில் பெரிய கட்டு போடப்பட்டிருந்தது. மூன்று நாட்கள் கழித்துதான் நினைவே வந்திருக்கிறது. 'பெரியவா' வந்து தேங்காய் வைத்து கட்டியிருக்கிறார் தலையில் என்றே சொல்லி (முனகி) வந்திருக்கிறேன். பிழைத்தாலும், பழைய விஷயங்கள் எதுவுமே ஞாபகம் இல்லை. மறுபிறவிதான் இது. நன்கு தெரிந்த சமஸ்கிருதத்தைக் கூட மறந்து தமிழில் 'ஸ்ரீ ராம ஜெயம்' எழுத ஆரம்பித்தேன். இப்போதுதான் சமஸ்கிருதத்தில் எழுத ஆரம்பித்துள்ளேன். விடாமல் எழுதி வருகிறேன். என் காலம் நிம்மதியாகக் கழிவது அதனால்தான் என்று எண்ணுகிறேன்.

**Mrs. Jayalakshmi**
**C/o. Lakshmi Sundaram,**
**95, Patel Road, Perambur Madras - 11**



## 61) மகோத்ஸவம் கொண்டாடுங்கோ!

### ஹரிகதா சரஸ்வதி சுப்பிரமணியம்

பெரம்பூரில் வசிக்கும் இவர் ஹரிகதா காலட்சேபம் செய்வதில் வல்லவர். 'கதாகாலட்சேப ரத்தினம்' என்ற பட்டம் பெற்றவர். தென்னங்கூரில் ஞானானந்த சுவாமிகள் ஆராதனை விழாவில் நந்தனார் சரித்திரம் பற்றிய காலட்சேபம் குறிப்பிடத் தக்கது. பதினேழு வயதிலிருந்து கச்சேரிகளும், காலட்சேபங்களும் செய்து வந்த இவர் இடையே குடும்பத்தில் ஈடுபட்டு சிலகாலம் நிகழ்ச்சிகள் அளிக்காதபோது, ஆடிட்டர் திரு. கிருஷ்ணசாமி ஐயர், இவரது வித்வத்துவத்தை அறிந்து ஊக்கமளித்ததில் தற்போது நிறைய நிகழ்ச்சிகளை அளிக்கிறார்.

"என் மாமனார் திரு. டி.எஸ். தியாகராஜய்யர், நாற்பது வருடங்களாக, சங்கர மடத்தில் அவர்களது நிலபுலன்களை கவனித்துக் கொண்டிருந்ததால், 'பெரியவாளிடம் நெருங்கிய தொடர்பும், தீராத பக்தியும் கொண்டவர். ஒரு சமயம் 'பெரியவா' குண்டூரில் தங்கியிருந்தார். அவரைத் தரிசிக்க வந்த கூட்டத்தில் ஒரு பைத்தியக்காரன் வந்து யாரையோ அடிக்கப் போனபோது என் மாமனார் தடுக்கப் போனதில், மாரடைப்பு வந்து அங்கேயே 'குருநாதா' என்று சொல்லிக் கொண்டே விழுந்ததில் பிராணன் போய்விட்டது. வருஷப் பிறப்பான அன்று பப்ளிஷர் பி.ஜி. பால், 'பெரியவாளை' தரிசிக்க வந்தார். அவரிடம் 'பெரியவா' விஷயத்தை சொல்லி 'ஹிந்து' பத்திரிகையில் வேலையாய் இருக்கும் என் மைத்துனருக்குச் சொல்லச் சொன்னார். தானே முன்னின்று கட்டளைகளைப் பிறப்பித்து 'மகோத்ஸவம்' கொண்டாடுங்கோ அவருக்கு என்றாராம். பெரியவா சன்னதியில் உயிரை விடும் பாக்கியம் யாருக்குக் கிடைக்கும். எப்பேர்பட்ட மகான் அவர்.

Mrs. Saraswathy Subramaniam, 8, Rajeswari St., Madras - 11



## 62) மாற்றல் மாறியது பதவி உயர்ந்தது

திரு. டி.எஸ்.டி. சுப்பிரமணியம்
(C.W.S. சூபரின்டென்டென்ட்)

என் தந்தை திரு. டி.எஸ். தியாகராஜன் அவர்கள் மடத்திலேயே வேலையாக இருந்தவர். பெரியவாளுடன் கூடவே இருப்பார். நாங்களும் பெரியவாளிடம் தீவிர பக்தி கொண்டவர்கள். என் மகன் தியாகராஜனின் மிருதங்க அரங்கேற்றம் மே மாதம் 23 ந் தேதி மூன்று 'பெரியவா' முன்னிலையிலும் நடந்தது. 'பெரியவா' ஆசி கூறி பொன்னாடை போர்த்தினார். சுமார் பத்து வருடங்கள் இருக்கும். பெற்றோர் இல்லாத நான் என் தங்கைக்கு திருமணம் நிச்சயித்தேன். திடீரென்று பிரமோஷன் காரணமாக திருவனந்தபுரத்துக்கு மாற்றலாகிவிட்டது. திருமணம் நடக்கும் சமயம் இப்படி மாற்றலானதே என்று மனம் கலங்கி 'பெரியவாளை'த் தரிசிக்கச் சென்றேன். நிலைமையை சொன்னேன். 'கவலைப்படாதே' அப்படி நேராது' என்றார். திரும்பி வந்து குறிப்பிட்ட அதிகாரியைப் பார்த்ததும் பிரமோஷனோடு, மாற்றல் இல்லாமல் உயர் பதவியில் சென்னையிலேயே இருக்கலாம் என்றார். மிகவும் சந்தோஷமடைந்தேன். எல்லாம் அந்த மகான் செயல்தான். கண்கண்ட தெய்வமாயிற்றே!

**Mr. T.S.T. Subramaniam,**
**8, Rajeswari St.,**
**Perambur, Madras - 11**

## 63) தீபாவளி உற்சவம் எங்களுடையது

**திரு. வெங்கடேசன் (ஓய்வு பெற்ற பி அன்ட் சி மில் அதிகாரி)**

காஞ்சி மடப்பள்ளி*விஸ்வநாதய்யர் என் தாத்தா. காஞ்சபுரத்தில் சன்னதித் தெருவில் எங்கள் வீடு இருந்தபோது சிறுவயதில் 'பெரியவாளை' மடத்தினுள் சென்று தரிசனம் செய்யாமல், வீட்டு வாசலில் வரும்போது நிறைய தடவை பார்த்துள்ளேன். படிப்பை முடித்து பி அன்ட் சி மில்லில் வேலை கிடைத்து சென்னைக்கு வந்துவிட்டேன். கடந்த நூறு வருஷங்களாக தீபாவளி அன்று காமாட்சி அம்மனுக்கு விடியற்காலை விசேஷ பூஜை, உற்சவம் எங்கள் குடும்பத்தாருடையதுதான். இப்போது எனக்கு உடல்நிலை சரியில்லை. ஒரே மகனும் வெளிநாட்டில் இருப்பதால், மாப்பிள்ளை செய்கிறார். எத்தனையோ பேர் கேட்டும் இந்தத் தீபாவளி உற்சவம் கிடைக்காதபோது எங்களுக்குக் கிடைத்தது பெரும்பேறு என்றே சொல்ல வேண்டும். '90-ம் ஆண்டு திடீரென ஒருநாள் பக்கவாதம் வந்து மயங்கி விழுந்து விட்டேன். பேசக்கூட முடியவில்லை. கொஞ்சம் சரியானதும் காஞ்சியில் உள்ள எங்கள் வீட்டுக்குச் சென்று ஒருவாரம் குடும்பத்துடன் தங்கினேன். கோவில் குருக்களான மார்த்தாண்ட குருக்கள் மெதுவாக என்னைப் 'பெரியவா'ளிடம் அழைத்துப் போனார். "நீ மடப்பள்ளி விஸ்வநாதன் பேரன்தானே!" என்று கேட்டு, ஆசி கூறி பிரசாதம் தந்தார். தன் கழுத்தில் போட்டிருந்த வில்வமாலையைக் கழற்றி என் கழுத்தில் போட்டார். வீட்டுக்கு வந்தவுடன் அந்த வில்வங்களைப் பொடி செய்து வைத்துக் கொண்டு நீரில் போட்டு தினமும் அருந்தி வந்தேன். அவர் அனுக்கிரஹத்தால், பேரருளால் '92 - ம் வருடம் நடந்த என் மகளின் திருமணத்தை நானே மணையில் அமர்ந்து, மந்திரம் சொல்லி நடத்த முடிந்தது. இப்போது நன்றாகத் தேவலை.

முக்கால்வாசி பேசவும் வந்துவிட்டது. எல்லாம் அந்த மகான் இட்ட பிச்சைதான். எங்கள் கண்கண்ட தெய்வம் அவர்.

Mr. Venkatesan
14, Bharathi Road Ist Street, Madras - 11

## 64) வேலை கிடைத்தது

### திருமதி சாவித்திரி ஸ்வாமிநாதன்

எங்கள் குடும்பம் பரமாச்சார்யாள் மீது மிகுந்த பக்தியுள்ள குடும்பம். என் மூத்த மகன் காசி 'பிடி அரிசி' வசூல் செய்து கொடுக்கிறான். பெரம்பூர் சங்கராலயத்தில் ஆயுள் உறுப்பனராக இருக்கிறான். இரண்டாவது மகன் கண்ணன். கடந்த பதினைந்து வருடங்களாக எங்கள் பிள்ளைகள் காஞ்சிபுரம் போய் 'பெரியவாளை'த் தரிசித்து வருகிறார்கள். 82 ம் வருடம் என் கணவர் இறந்துவிட்டார். அப்போது மூத்தவன் பி.எஸ்.ஸி. முடித்திருந்தான். அடுத்த இரண்டு பிள்ளைகள் படித்துக் கொண்டிருந்தனர். வயதான மாமியார், மாமனார் இருந்தனர். மிகவும் கஷ்ட ஜீவனம். பட்ட சிரமம் சொல்லி முடியாது. பெரம்பூர் காமாக்ஷி மண்டலியில் உறுப்பினராக இருந்தேன். அதன் தலைவி துரை அம்மாள் பூஜையில் வைத்த பரமாச்சார்யாள் படம் ஒன்றை ஒருநாள் கொடுத்தார். அதை வீட்டில் வைத்து பூஜை செய்து வந்தேன். இரண்டு நாட்களில் சிம்சன் நிறுவனத்திலிருந்து மூத்தவனுக்கு வேலைக்கு ஆர்டர் வந்தது. அடுத்த ஆறாவது மாதம் என் கணவரது இரயில்வே வேலை கிடைத்துவிட்டது. இப்போது என் இரண்டாவது மகன் கம்ப்யூட்டர் படித்துவிட்டு நல்ல வேலையில் இருக்கிறான். மூன்றாவது மகன் 'குழந்தை மருத்துவம்' சிறப்புப் படிப்பு படித்துக்கொண்டிருக்கிறான். 'பெரியவாள்' அனுக்கிரஹம்தான் இதற்கெல்லாம் காரணம். அவரது பரிபூரண ஆசியை தினமும் வேண்டி நிற்கின்றோம்.

Mrs. Savithiri Swaminathan
8, Srinivasa Achari St., Madras - 11.



## 65) பெரியவாள் இட்ட உயிர் பிச்சை

**திரு. குமார் (விக்னேஷ் போட்டோ ஸ்டூடியோ உரிமையாளர்)**

மேற்கு மாம்பலம் துரைசாமி மேம்பாலம் அருகே போட்டோ ஸ்டூடியோ நடத்தி வருகிறார். 'பெரியவா'ளின் தீவிர பக்தர். வாரம் தவறால் காஞ்சிபுரம் சென்று வரும் பழக்கம் உள்ளவர். கடந்த பதினைந்து வருடங்களாக இத்தொழிலில் ஈடுபட்டுள்ளார். பெரியவாளைக் கடந்த பத்து வருடங்களாக பலவிதமான வடிவங்களில் (போஸ்கள்) படம் பிடித்து வைத்துள்ளதை தற்போது தொகுத்து ஒரு புத்தகமாக வெளியிட்டுள்ளார்.

"நான்கு வருடங்கள் முன்பு ரங்கமணி என்ற பெண் தன் அக்காவின் போட்டா ஒன்றை பிள்ளை வீட்டாருக்கு அனுப்புவதற்காக இங்கு போட்டோ எடுக்க தன் அக்காவை அழைத்து வந்தாள். திரும்பிப் போகும்போது சுரங்கப்பாதையைப் பயன்படுத்தாமல் தண்டவாளத்தைத் தாண்டியபோது கவனக்குறைவாக இருந்ததில் இருவரும் திடீரென்று கவனித்தபோது, மூன்று லைன்களிலும் ரயில்கள் வந்து கொண்டிருந்ததைக் கண்டு அக்கா, ரங்கமணியை பிடித்து இழுத்தும், நெற்றியில் பலத்த அடிபட்டு முப்பது அடி தூரம் தூக்கியெறியப்பட்டாள். அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்த அந்த நேரத்தில், டீ குடிக்கச்சென்ற கடைப்பையன் பார்த்துவிட்டு ஓடிவந்து 'நம்மிடம் போட்டோ எடுத்துக்கொண்டு சென்ற பெண்களுக்கு ஆபத்து' என்று நிலைமையை சொன்னான். உடனே நான் ஓடிச் சென்று அருகிலிருந்த ராஜு நர்சிங் ஹோமிற்கு அழைத்துச் சென்றேன். பெருகிய ரத்தத்தை நிறுத்தினாலும், மூளை வெளியில் வந்தது போல ஆகிவிட்டதால் அவர்களது ஆம்புலன்சிலேயே ஏழே நிமிடங்களில் 'அப்பல்லோ' மருத்துவமனைக்குக் கொண்டு

சென்றேன். அதற்குள் குடும்பத்தினர் அலறி அடித்துக் கொண்டு வந்து சேர்ந்தனர். டாக்டர் ராகவேந்திரராவ் உடனே ஈ.சி.ஜி எக்ஸ்ரே எல்லாம் எடுத்து சிகிச்சையை ஆரம்பித்தார். என் சட்டைப்பையில் 'பெரியவா'படம் (சிறு அளவில்) நாலைந்து இருந்து கொண்டே இருக்கும். அதை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டு 'பெரியவா இந்தப் பெண்ணைக் காப்பாத்துங்கோ' என்று வேண்டிக்கொண்டே இரவு முழுவதும் அமர்ந்திருந்தேன். நரம்பியல் நிபுணர் டாக்டர் ரெஜினால்டும் வந்து சேர்ந்தார். அந்தப் பெண் நினைவே வராமல் 'கோமா' நிலையில் இருந்தாள். கண்கள் வெளி வந்துவிடுவது போன்ற நிலை.

மறுநாள் காலையில் காஞ்சிக்கு ஓடிச்சென்று நிலையை சொன்னேன். 'பெரியவா' பழம் கொடுத்தார். ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் கல்கண்டு தந்தார். பால பெரியவாள் 'பரோபகாரி' இங்கே வா, ஐயங்கார் பொண்ணுதானே' என்று கேட்டு ஸ்ரீ ரங்கத்திலிருந்து வந்திருந்த 'விஷ்ணுசக்கரம்' தந்தார். ஒரு வாரம் ஆகியும் நினைவு திரும்பவில்லை. அவர்களால் பணம் செலவழிக்க முடியாததால், சென்னை அரசு மருத்துவமனைக்கு கொண்டு போய் அட்மிட் செய்தனர். தினமும் 'பெரியவா' பூஜை முடித்ததும் தரும் தீர்த்தத்தை நானே அல்லது யாரேனும் ஒருவரோ வாங்கி வந்து அந்தப் பெண் வாயில் ஊற்றுவோம். டாக்டர் கல்யாணராமன் அவர்கள் சிகிச்சை செய்து வந்தார். பதினைந்து நாட்களாகியும் நினைவு வரலையே என்று பெரியவாளிடம் கேட்டேன். தன் தலையில் கட்டியிருந்த பரிவட்டத்தை எடுத்துக் கீழே போட்டார். அதைக் கொண்டுபோய் ரங்கமணியின் தலையில் கட்டி வைத்தோம். மறுநாள் மெதுவாக ஈனஸ்வரத்தில் அம்மா, அப்பா என்று முனக ஆரம்பித்தாள். மெதுவாகக் குணம் தெரிய ஆரம்பித்தது. வீட்டுக்கு அழைத்துச் சென்றனர். இப்போது எக்மோர் மருத்துவமைனையில் கண்களுக்கு சிகிச்சை பெறுகிறாள். ஒரு

கண் தெரிகிறது. மற்றொரு கண்ணும் லேசாகத் தெரிகிறது. எப்பேற்பட்ட அபாயத்திலிருந்து 'பெரியவா' அவள் உயிரைக் காப்பாற்றினார் என்று நினைத்தாலே மனம் மகிழ்கிறது. இதுபோல பல நிகழ்ச்சிகளை சொல்லிக் கொண்டே போகலாம். அவரது கருணைக்கு எல்லையேது?

Vignesh Photo Studio
Mr.Kumar
25, Nadamuni Street
T. Nagar
Madras 600 017



## 66) ஆரத்தி எடுத்தேன்

**திருமதி. ஜம்பகலக்ஷ்மி ராமன் (ஹிந்தி ஆசிரியை)**

என்னால் முடிந்தபோது பெரியவாளைச் சந்திப்பது வழக்கம் ஒருமுறை நானும், எனக்குத் தெரிந்த பெண்ணும் காஞ்சிபுரம் போனோம். இரவு ஆகிவிட்டது. காலையில் 'பெரியவாளை'த் தரிசிக்க எண்ணி அங்குள்ள மணற்பாங்கான இடத்திலே படுத்து உறங்கினோம். விடியற்காலை மூன்று பெரியவாளுக்கும் சேர்த்து ஆரத்தி எடுப்பது வழக்கமாம். அங்கிருந்த ஐயர் மாமி ஒருவருடன் கூட என்னையும் ஆரத்தி எடுக்கச் சொல்லி அழைத்தனர். ஆஹா! எபேற்பட்ட பாக்கியம் அது. கனவிலும் நினைத்தறியாதது. இன்று நினைத்தாலும்

நெஞ்சு குளிர்கின்றது. அதேபோல 'பெரியவாள்' கண் ஆபரேஷன் செய்து கொண்ட பிறகு கண் திறந்து தரிசனம் தந்த முதல்நாள் நான் தரிசனம் செய்ததும் மறக்க முடியாது. அவர் கண்ணைத் திறந்தவுடன் காணும் பாக்கியம் பெற்றதால் 'பகவான் கண் திறந்தார்' என்பது போல என் இரண்டு பெண்களுக்கும் கஷ்ட ஜீவனத்திலும் திருமணம் நன்கு நடந்தது. என்னுடன் டீச்சராக இருந்த சுசீலா சுப்ரமணியமும் நானும் போன போது ஏகப்பட்ட கூட்டம். பிரபலமானவர்கள் நிறையகாணிக்கைகள், பழத்தட்டுகளுடன் நின்றிருந்தாலும், வெறுங்கையுடன் வந்திருந்த எங்களுக்கு ஆசி கூறி, பழம் கொடுத்தார். அதன் பிறகுதான் சுசீலாவுக்கு 'ஆதர்ஷ் வித்யாலயாவில்' வேலை கிடைத்தது. அடிக்கடி போய் தரிசிக்க மனம் விரும்பும். ஆமாம்! அவரது பார்வை பட்டாலே போதுமே!



*ஜம்பகலக்ஷ்மி ராமன், (ஆசிரியை)*
*15, பேயாழ்வார் கோவில் தெரு*
*திருவல்லிக்கேணி*
*சென்னை 600 005*

## 67) கனவில் பிரத்யக்ஷமாய் தரிசனம்

**திருமதி ராதா சங்கர்**

நான் மதுரை அரசு மருத்துவமனையில் **Open Heart Surgery** பிரிவில் ஈ.சி.ஜி. எடுக்கும் பணியில் இருந்தேன். எனக்கு ஒரே மகன். நான்கு வருடங்கள் முன்பு என் கணவர் இறந்துவிட்டார். டென்ஷன் இன்றி அமைதியாகப் பணியாற்ற வேண்டிய பிரிவாதலால், வாலன்டரி ரிடையர்மென்ட் வாங்கிக் கொண்டு வாலாஜாவில் உள்ள என் அக்கா வீட்டில் வந்து தங்கியிருந்தேன். கோயமுத்தூரிலிருந்து வந்த என் தங்கையும், அக்காவும் பரமாச்சார்யாளைத் தரிசிக்கக் காஞ்சிபுரம் சென்றபோது நான் போகவில்லை (கணவர் இல்லாததால்) போக மனமும் வரவில்லை. சென்னையில் மைத்துனர் பெண்ணுக்குத் திருமணம்

நிச்சயமாகியிருந்ததையொட்டி ஜூன் 6ந்தேதி நடந்த நிச்சயதார்த்தத்துக்கு வந்தேன். வந்தவுடன் மைத்துனர் மகள் 'பெரியவா' படம் ஒன்றைக் கொடுத்து வைத்துக் கொள்ளுங்கள் சித்தி என்றாள். வேறு யாரிடமும் கொடுக்காமல் எனக்குக் கொடுத்தது மகிழ்ச்சியாக இருந்தது. பிறகு பெங்களூர் போனேன். அங்கே எனக்கொரு கனவு வந்தது. கனவில், 'பெரியவாளை'த் தரிசிக்க மிக நீண்ட வரிசை, ஏகக் கூட்டம் எப்படி தரிசிப்பது? தரிசனம் கிடைக்குமா? என்று நினைத்துக் கொண்டே நிற்கிறேன் வரிசையில். 'ராதா,' என்று மெதுவாக அழைக்கும் குரல் கேட்கிறது. பெரியவாளுக்கு மயக்கம் வந்துவிட்டது. ஊசி போடு என்று கூப்பிடுகிறார்கள். அவர் படுத்துக் கொண்டிருக்கிறார். அவர் தான் 'ராதா' என அழைத்ததாகக் கூறுகின்றனர். அருகில் போனதும் அனைவரும் விலகிவழிவிடுகிறார்கள் 'பெரியவா' கண்ணைத்திறந்துபார்த்து, கையைத்தூக்கி என்னை ஆசிர்வதிக்கிறார். என் கண்களை நம்பவே முடியவில்லை' விழிப்பு வந்து கனவு கலைந்துவிட்டது. கனகாபிஷேகத்தைப் பார்க்கவில்லையே! பெரியவாளை தரிசிக்க முடியவில்லையே என்று நினைத்துக் கவலைப்பட்ட என் மனதுக்குக் கனவில் பிரத்யக்ஷமாக வந்து காட்சி தந்து ஆசி கூறியதை நினைத்தால் உடல் சிலிர்க்கின்றது. கண்கண்ட தெய்வம் அவர். என் ஒரே மகனுக்கு சி.ஏ. படிக்க இப்போது சென்னையில் இடம் கிடைத்துவிட்டது. எல்லாம் அவர் அருளால்தான்.

**Mrs.Radha Shankar**
**197, 4th Main Road**
**TamilNadu Housing Road**
**Wallajah**
**North Arcot District**



## 68) பிரசாதம் தர அழைத்தார்

**திருமதி கோமதி சிவராமகிருஷ்ணன் :**

இருபத்தி ஐந்து வருடங்கள் இருக்கும் அப்போது நாங்கள் குரோம்பேட்டையில் குடியிருந்தோம். வீட்டுச் சொந்தக்காரர்கள் மடத்துக்கு மிக நெருங்கிய தொடர்புடையவர்கள். 'பெரியவாளை' ஒருசமயம்பாதபூஜைக்கு அழைத்திருந்தனர். அவரும் அங்கு வந்து மூன்று நாட்கள் தங்கினார். எங்கள் போர்ஷனை பூஜைக்கு ஒழித்துக் கொடுத்துவிட்டுபக்கத்துத்தெருவில்சென்றுதங்கினோம். பூஜை முடிந்ததும் பரமாச்சார்யாள், வீட்டு சொந்தக்காரரிடம் 'குடியிருக்கிறவாளைக் கூப்பிடுங்கோ, நானே என் கையால் நேரிடையாகப் பிரசாதம் தரணும்' என்றார். என்ன புண்ணியம் செய்தவர்கள் நாங்கள். பெரியவா அழைத்து பிரசாதம் தரும் பாக்கியம் கிடைத்தது. எனக்கு இரண்டு பையன்கள், இரண்டு பெண்கள். குழந்தைகளை அவர் காலடியில் போட்டு ஆசி வாங்கினோம். பிரசாதம் தந்தார். குழந்தைகளிடம் பெயரைக் கேட்டுபிரசாதம் தந்தார். கடைசி மகளுக்கு இப்போது திருமணம் நிச்சயம் செய்துள்ளோம். எல்லோரும் நன்றாக இருக்கின்றனர். 'சிருங்கேரி பெரியவா' வழி நாங்கள் என்றாலும் 'காஞ்சி பெரியவாள்' மீது அலாதி பக்தியுண்டு. நடமாடும் தெய்வம் அவர்.

**Mrs. Gomathy Sivaramakrishnan,**
**D-1, Unity Apartments,**
**42, Chakarapani St.,**
**West Mambalam, Madras - 33**



## 69) மகள் திருமணத்துக்கு உத்தரவு

**திருமதி ஜெயலக்ஷ்மி ஸ்ரீனிவாசன்**

என் கணவர் ஸ்ரீ கலாநிகேதன் சபாவில் செயலாளராகப் பல வருடங்கள் இருந்தவர். அடிக்கடி பெரியவாளை தரிசனம்

செய்வது வழக்கம். என் இரண்டாவது மகளுக்குத் திருமணம் செய்ய நினைத்தோம். அப்போது 'பெரியவா' வேலூரில் முகாம் இட்டிருந்தனர். குடும்பத்துடன் தரிசிக்கச் சென்றோம். தரிசனம் நடந்து கொண்டிருந்தபோது என் கணவரின் சொந்த ஊரான தேப்பெருமாநல்லூர் பற்றி 'பெரியவா' கேட்டார். 'அன்னதான சிவன் பிறந்த ஊராச்சே' என்று ஊரைப்பற்றியும், அங்குள்ளவர்களைப்பற்றியும் விசாரித்தார். 'கல்யாணம்' நன்றாக நடக்கும் என்று ஆசிர்வதித்தார். அவர் ஞாபகசக்தி மிகவும் வியக்கத்தக்கது. ஆறே மாதத்தில் 84 ல் என் மகள் திருமணம் நடந்தது. எந்தக் காரியத்துக்கும் 'பெரியவா' உத்தரவு கேட்டுத்தான் என் கணவர் நடப்பார்.

**Mrs. Jayalakshmi Srinivasan,**
**B 8, Unity Apartments**
**42, Chakrapani St.,**
**West Mambalam, Madras - 33.**
**Phone : 424243**



## 70) சிறப்பாய் நடைபெற்ற சபா நிகழ்ச்சகள்

**திரு. ஸ்ரீனிவாசன்**

தொலைபேசி அலுவலகத்தில் வேலை பார்த்துக் கொண்டிருந்த நான் 'ஸ்ரீ கலாநிகேதன்' என்ற சபாவில் 54 ஆம் ஆண்டு முதல் 88 ம் ஆண்டுவரை அங்கத்தினராகவும், நிர்வாகக் குழுவிலும், பொருளாளர், செயலாளர் பதவிகளும் வகித்து வந்தேன். 1964 ஆம் வருடம் எங்கள் சபாவின் சார்பில் மே மாதம் முழுவதும் திரு. கிருபானந்தவாரியார் அவர்களின், கம்பராமாயணச் சொற்பழிவு நிகழ்ச்சயை ஏற்பாடு செய்து, 'பெரியவா' அனுக்ரஹம் பெற காஞ்சிக்குச் சென்றோம். காமாட்சி அம்மன் கோவில் தெப்ப உற்சவ சமயமாக இருந்தது.

'பெரியவாளுடன்' தெப்பத்தில் அமர்ந்து போனோம். இரவு நீண்டநேரம் அவருடன் பேசிக்கொண்டிருந்தேன். 'காலட்சேபம் நன்றாக நடக்கும்' என்று ஆசி கூறினார். ஜவஹர்லால் நேரு அவர்கள் மறைந்த தினம் மட்டும் ஒருநாள் நிகழ்ச்சித் தடங்கலே தவிர மீதி முப்பது நாட்களும் மிகவும் சிறப்பாக ஏராளமான கூட்டத்துடன் நடந்தது. அன்னதானம் செய்ய நிதி எதிப்பார்த்ததைவிட அதிகமாகத் திரண்டது. திரு. காமராஜர் முதல்வராக இருந்த சமயம் 'அங்குல்யப் பிரதானம்' அன்று தலைமை தாங்கனார்கள். வாரியார் அவர்கள் காமராஜர் பிரம்மச்சாரி ஆஞ்சநேயர் போல அதனால் அவர் இன்று தலைமை தாங்குவது மிகப் பொருத்தமானது என்றார். 'பெரியவாள்' ஆசியுடன் சிறப்பாக நடந்த அந்த நிகழ்ச்சியை மறக்கவே முடியாது. மற்றொரு சமயம் நான் வேலூர் போயிருந்தேன். அங்கு முகாமிட்டிருந்த பரமாச்சார்யாளைத் தரிசித்தச் சமயம் புத்தி சுவாதீனமில்லாமல் இருந்து குணமடைந்த ஒருவர் 'பெரியவா' சொன்ன பிராச்சித்தம் ஒன்றை செய்துவிட்டு குணமாகி வந்து தரிசித்துக் கொண்டிருந்ததை அறிந்தேன். கண்கண்ட தெய்வம் இந்தக் கலியுகத்தில் 'பெரியவா' தான்.

**Mr. Srinivasan,**
**B-8, Unity Apartments,**
**A2, Chakrapani St.,**
**West Mambalam,**
**Madras - 33.**





## 71) பெரியவாள் நடத்திய விசேஷ பூஜை

**குமாரி லீலா (ராமேச்வரம் தெரு, காமகோடி மண்டப வீட்டு சொந்தகாரர்)**

1930ம் ஆண்டிலிருந்தே 'பெரியவா' வீட்டுக்கு வருவா. என் தாத்தா ஜி.ஏ.வைத்தியநாதய்யர். 1957ல் என் பெற்றோர். என் அத்தையின் சஷ்டி அப்தபூர்த்திக்காக ஸ்ரீரங்கம் சென்றிருந்தனர். சென்னையில் 'பெரியவா' வந்து எங்கள் வீட்டு முன்புறம் பந்தல் அமைத்துத் தங்குவதற்காக மடத்தைச் செர்ந்த கமிட்டியினர் அனுமதி கேட்டனர். நாங்கள் உடனே தொலைபேசி மூலம் கேட்டு ச்சொல்வதாக சொல்லி பெற்றோரிடம் கேட்டதும் அவர்கள் உடனே வீடு திரும்பினர். அதற்குள் கோபாலபுரத்தில் தங்கியிருந்த பெரியவாளிடம் வீடு தரமாட்டேன் என்று சொல்லிவிட்டதாகத் தகவல் சொல்லிவிட்டனர். அப்பா வந்ததும், 'வீடு தரமாட்டேன் என்று சொன்னாயாமே?' என்று பெரியவா கேட்டதும், செய்தி அறிந்தவுடன் ஊருக்குத் திரும்பிவிட்டதாக அப்பா சொன்னார். தற்காலிகமாக பந்தல் போட்டுக் களிமண் சுவர் கட்டினோம். அப்போதிலிருந்து 'பெரியவா' வந்தால் அங்குதான் தங்குவார். 1957ல் ஸ்ரீ ஜயேந்திரர் இங்குதான் அவர்கள் பெரியவாருக்குக் கோலாலமாகக் கனகாபிஷேகம் செய்தார். பிறகு 59ல் நிரந்தரக்கட்டிடம் கட்டி வைத்தோம். நவராத்திரி பத்துநாட்களும், சங்கர ஜயந்தி வைபங்களும் இங்கு நடத்துகிறோம். வசதியில்லாதவர்கள் வீட்டுத் திருமண ஜானவாசம் இங்கு நடக்கும். தர்மப்பூணூல் போட இடம் தருகிறோம். 'பெரியவா' கண்கண்டதெய்வம். எங்கள் வீடு அவர் வைபவங்களுக்கு உபயோகப்படுவதைப் பெரும் பாக்கியமாகக் கருதுகிறேன். 1959ல் என் அப்பா திரு.ஜி.வி.கல்யாணமய்யருக்கு 'மெனஞ்சடிஸ்' என்று மூளை ஜுரம், மலேரியா, டைபாய்டு

மூன்றும் வந்தது. 'ரங்கா நர்சிங் ஹோமில் அட்மிட் செய்தோம். அப்போது 'பெரியவா' வானகரத்தில் தங்கியிருந்தார். ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி அவர்களை நித்யப்படி பூஜைகளை செய்யச் சொல்லிவிட்டு, என் அப்பாவுக்காக தினமும் நான்கு காலவிஷேச பூஜையைத் தானே செய்து பிரசாதத்தை சிம்சன் திரு.வைத்தியநாதன் ? ஜய ஜய சங்கர.

## 72) விரும்பிய வேலை கிடைத்தது

விசாலாட்சி ராமசாமி

எங்கள் குடும்பத்தில் பல வருடங்களாக 'பெரியவா' வந்து தங்கும் பாக்கியம் பெற்றவர்களானோம். அவர் உத்தரவுப்படிதான் அனைத்தும் நடக்கும். என் திருமண சமயத்தில் மூன்று ஜாதகங்கள் வந்தன. அப்பா, பெரியவாளிடம் மூன்று வரன்கள் வந்துள்ளது என்றதும் ''மற்ற இரண்டு வரன்களை விட குறைவாகப் படித்திருந்தாலும் இதைப் பண்ணு'' என்று பெரியவா சொல்லிவிட்டார். என் திருமணமும் நடந்து நல்லபடியாக வாழ்ந்து கொண்டிருக்கிறோம். அவர் வேண்டாமென்று சொல்லியதில் ஒரு வரன் மாரடைப்பாலும், மற்றொருவர் ஸ்டவ் வெடித்து எரிந்தும் இறந்துவிட்டனர். தீர்க்கதரிசியான பரமாச்சார்யாள் வாக்குப்படி நடந்தது நல்லதாய் போயிற்றல்லவா?

என் தாயின் வம்சத்தில் திருமணமாகி முதல் வருடம் கர்ப்பமாகாவிட்டால் பத்து வருடம் கழித்துதான் குழந்தை பிறக்கும். இல்லாவிட்டால் வம்ச விருத்தியே இருக்காது. அதனால் மணமானவுடன் வந்த ''காரடையான் நோன்பு'' என்று பெரியவாளை தரிசித்தோம். என் மனதிலே குழந்தைப் பேறு பற்றிய எண்ணத்துடனே இருந்தேன். பல்லக்

கிலே வந்த 'பெரியவா' என்னைக் கண்டதும் மடியைப் பிடிக்கச் சொல்லி புடவைத் தலைப்பில் ரோஜா மாலையைப் போட்டார். மணமாகி ஒன்றரை வருடத்தில் முதல் குழந்தை அவரது ஆசியால் பிறந்தது. ஆக்ஸிஜன் கொடுத்து தான் அக்குழந்தை பிழைத்தது. 'பெரியவா'கிட்ட குழந்தை பிறந்ததுபற்றி சொன்னதும் ''குழந்தை உயிரோடு இருக்கா? '' என்று கேட்டாராம். ''அமோகமாக இருப்பான்'' என்று அவர் ஆசீர்வதித்தபடி எல்லாமே அவனுக்கு 'double promotions' முதலில் 'ஸ்ரீராம் குரூப்' நிறுவனத்தில் வேலை கிடைத்தது. வெளிநாட்டு நிறுவனத்திலிருந்து கிடைக்கவில்லையே என்று வருத்தம் அவனுக்கு, 'ஒரிகை'யில் 'பெரியவா' தங்கியிருந்தபோது வேலைபற்றி சொன்னதும் ''போகட்டும், போகட்டும்'' என்று இரண்டு முறை சொல்லிவிட்டார். வருத்தமாக இருந்தது. பெரியவாளே இந்த வேலைக்குப் போகட்டும் என்று சொல்லிவிட்டாரே என்று. பிரசாதம் வாங்கிவந்து பையனிடம் கொடுத்தேன். மறுநாள் விபூதி பிரசாதத்தை இட்டுக் கொண்டு புது ஆபீஸுக்குக் கிளம்பும் போது 'சிட்டி பேங்க்'கிலிருந்து வேலைக்கு வரச் சொல்லி ஆர்டர் வந்தது. இந்த பேங்க் வேலைக்கு நான் விண்ணப்பிக்கவே இல்லையே என்று என் மகன் ஆச்சரியப்பட்டான். பெரியவாளுடைய மகிமையை என்னென்பது!

Mrs. Visalakshmi Ramaswamy,
25/1, Type IV,
C.P.W.D. Quarters,
Besent Nagar,
Madras. ௯0



## 73) குழந்தைப் பேறு

### திருமதி கமலா கிருஷ்ணமூர்த்தி

''பெரியவாளிடம்' எங்களுக்குத் தீவிர பக்தியும், ஈடு பாடும் உண்டு. என் தாயார் வம்சத்தில் மணமான முதல் வருடம் குழந்தை பிறக்காவிட்டால் பத்து வருடம் கழித்து தான் பிறக்கும். அப்படியும் பிறக்காவிட்டால் குழந்தைப் பேறு இருக்காது. மணமாகிப் பத்து வருடம் எனக்குக் குழந்தைகள் இல்லை. இனி பிறக்காவிட்டால் என்ன செய்து என்று வருந்தினேன். அப்போது பெரியவா என் சித்தி வீட்டில் ராமேச்வரம் தெரு காமகோடி மண்டபத்தில் தங்கியிருந்தார். பிரசாதம் கொடுத்தார். அடுத்தடுத்து ஐந்து பிள்ளைகளும், இரண்டு பெண்களுமாக ஏழு குழந்தைகள் பிறந்தன. எல்லோரும் படித்து நல்ல நிலைமையில் இருக் கின்றனர். மூன்று பிள்ளைகளுக்கு மணமாகிவிட்டது. இரண்டாவது பெண்ணுக்கு இப்போது கல்யாணம் நிச்சய மாகியிருக்கிறது. என் சித்திக்கும் பத்து வருடம் கழித்துதான் குழந்தைகள் பிறந்தன. அவரது கருணைக்கு எல்லையே இல்லை!

Mrs. Kamala Krishnamurthy,
59, Kennett Road,
Elees Nagar,
Madurai 600 010.



## 74) சிவராத்திரி உபயம்

### திருமதி சாரதா விஸ்வநாதன்

'பெரியவா' மீது ஆழ்ந்த பக்தி உண்டு. சிவராத்திரிக் காக நடக்கும் பூஜைக்காக காஞ்சிபுரம் கிளம்பினேன். என் தோழி லீலாவும் வந்தாள். அவளுக்கும், அவள் குடும்பத்தா

ருக்கும் பெரியவாளுடனும், மடத்துடனும் நெருங்கிய தொடர்பு உண்டு. அதனால் அவளோடு கிளம்ப உத்தேசித்து காய்கறிகளை முதல் நாள் வாங்கிய நான் பின்பக்கம் உள்ள என் பிளாட்டுக்கு போகாமல் முன் பக்கமுள்ள லீலாவின் வீட்டில் வைத்துவிட்டு மறுநாள் கிளம்ப எண்ணி விடை பெற்று மாடிப்படி ஏறும்போது தடுக்கி விழுந்துவிட்டேன். மூக்கில் நல்ல அடி. ரத்தமாகக் கொட்டுகிறது. மறுநாள் ஆஸ்பத்திரிக்குப் போயே ஆக வேண்டிய நிலை. லீலாவிடம் காய்கறிகளை எப்படியாவது பூஜை சமயம் மடத்தில் சேர்த்துவிடு என்று கேட்டுக் கொண்டேன். பாவம்! தனியாக எப்படியோ அத்தனை காய்கறிகளையும் தூக்கிக் கொண்டு காஞ்சிபுரம் பஸ் ஏறினாள். பெரியவாளுக்கு சமையல் செய்யும் ஸ்ரீகண்டன் என்பவர் லீலா கொண்டு வந்த காய்கறிகளைப் பார்த்துவிட்டு பெரியவாளுக்கு வேண்டியது வந்துவிட்டது என்று சந்தோஷப்பட்டார் என்று அவள் வந்து சொன்னதைக் கேட்டதும் நான் போகமுடியவில்லையே என்ற வருத்தம் குறைந்துவிட்டது. காரணம் இருந்ததால்தான் தடை ஏற்பட்டிருக்கும். அதனால் தான் முதல் நாளே காய்கறிகளை அவள் வீட்டில் வைக்க நேர்ந்ததோ! என்று நினைத்து சமாதானப்படுத்திக்கொண்டேன்.

Mrs. Saradha Viswanathan,
41, Pinjala Subramaniam Street,
T. Nagar,
Madras 600 017.



## 75) பெரியவாளுக்குப் பிடித்த விளாம்பழம்

திரு. வரத தாத்தாச்சாரி

காஞ்சிபுரம் சன்னதித் தெருவில் எங்கள் சொந்த வீடு இருந்தது. நான் வரதராஜ பெருமாள் கோவில் டிரஸ்டியாக

அப்போது இருந்தேன். எங்கள் வீட்டில் விளாம்பழ மரம் இருக்கும். 'பரமாச்சார்யாளுக்கு' அந்தப் பழம் மிகவும் பிடிக்கும் என்று அறிந்து வைத்திருந்த ஒரு அம்மையார் என் வீட்டு எதிர் வீட்டில் வந்து தங்கியிருந்தார். மரத்திலி ருந்து பறிப்பதை விட கீழே விழுந்தவுடனே எடுக்கும் பழத்துக்கு ருசி அதிகம் என்பதால், அந்த அம்மாள் கேட்டுக் கொண்டபடி தினமும் கீழே விழுந்த பழங்களை எடுத்து சுத்தம் செய்து ஒரு கூடையில் போட்டு வைத்திருப்பேன். எடுத்துப் போவார். அவருக்குப் பிடித்தப் பழத்தை நான் கொடுக்க முடிந்ததே என்று சந்தோஷப்படுவேன். 'பெரிய வா' தேனம்பாக்கத்தில் ஒரு முறை தங்கியிருந்தபோது அவரை தரிசிக்க நம் மறைந்த பிரதமர் இந்திராகாந்தி அவர்கள் வந்தார். அன்று பெரியவா மௌனம் அனுஷ்டிக் கும் தினம். அதனால் பிரதமருக்கு மன வருத்தமாகிவிட்டது. இருந்தும் குகை போன்ற இடத்தில் ஓரமாக உட்கார்ந்திருந்த 'பெரியவா' முன்பு மூன்று மணி நேரம் அமைதியாக அமர்ந்து அவரையே பார்த்துக் கொண்டு (தரிசனம் செய்து விட்டு) இருந்துவிட்டு பிறகு கிளம்பிச் சென்றார். எத்த னையோ அலுவல்களுக்கிடையே நிமிட நேரமும் பொன் னாகக் கருதி செயல்படும் பிரதமர் அவர்கள் வந்து மணிக்க ணக்கில் அமர்ந்திருந்து அனைவருக்கும் ஆச்சரியத்தை அளித்தது. அவரது பக்தியை, ஈடுபாட்டை எண்ணி வியந் தோம். நடமாடும் தெய்வம் 'பெரியவா'தான்.

Mr. Varadha Thathachari,
9, Vasudevapuram,
Triplicane,
Madras 600 005.



# 76) பரம்பரையை விசாரித்தார்

**திருமதி சுலக்ஷணா ராஜகோபால்**

1990 ல் நைஜீரியாவிலிருந்து சென்னை வந்தோம். சுவாமி சின்மயானந்தா அவர்களிடம் எங்களுக்கு மிகுந்த ஈடுபாடு. அவருடைய பிரசங்கங்களை என் கணவர் விரும்பிக் கேட்பதுடன் ஞாயிற்றுக் கிழமைகளில் ஒரு மணி நேரம் 'கீதை' சொல்வார். அடிக்கடி காஞ்சிக்கும் சென்று வருவோம். 1986 ம் ஆண்டு அக்டோபர் மாதம் சிநேகிதர்கள் பத்து பேருடன் காஞ்சிக்குச் சென்றேன். என் அத்தையின் கணவர் திரு. ராமச்சந்திர சாஸ்திரிகள் பெரியவாளுடன் மிக நெருக்கமானார். அவர்கள் இருவரும் சமஸ்கிருதத்தில் பேசிக் கொள்வார்கள். பிரபல வக்கீல் அவர். 'பெரியவா' செய்யும் பிரசங்கத்தை மொழிபெயர்த்து சொல்லுவார். நான் தரிசனம் செய்த அன்று பெரியவாளிடம் இருபது நாட்கள் முன்பு என் அத்திம்பேர் மறைந்த செய்தியைச் சொன்னேன். பிறகு அரைமணி நேரம் மைசூரிலிருந்து வந்த குடும்பத்துடன் பேசிக் கொண்டிருந்தார். நாங்கள் கிளம்ப நினைத்தோம். ''ராமச்சந்திர சாஸ்திரிகளின் உறவுக்காரனை கூப்பிடு '' என்று சிஷ்யரிடம் பெரியவா சொன்னதும் நாங்கள் தடுப்பு அருகில் போய் நின்றோம். சாஸ்திரிகளுடைய பாண்டித்தியம் பற்றி சொன்னார். எஸ்.கே. சுப்பிரமணியம், அவரது சகோதரர் பற்றி கேட்டார். (முப்பது வருடங்களுக்கு முன் திருப்பதிக்கு ரோடு போட்ட Gannon Dunkerly என்ற சிவில் இன்ஜினியரிங் கம்பெனியின் டைரக்டர் அவர்) அவர் சம்மந்தி 'பின்னி' சுப்பாராவ், கோயமுத்தூரில் ஸ்ரீராம நவமி கச்சேரிகள் ஏற்பாடு செய்வார். மிகப் பிரபலமானவர். இன்னொரு தம்பி மாமனார் திரு. ராமச்சந்திரய்யர் கோயில் கட்டினார் என்றதுடன் எஸ்.கே.எஸ். தெரியுமா? என்றார்.

''தெரியும் என் அம்மாவுக்கு சித்தப்பா'' என்றேன். இப்படி நீண்ட நேரம் நெருங்கிய சிநேகிதர் போல casual ஆகப் பேசியது இன்றும் மறக்க முடியவில்லை எனக்கு. என்னுடன் வந்தவர்கள் ''உன்னால்தான் பெரியவாளை இவ்வளவு நேரம், இவ்வளவு அருகாமையில் தரிசிக்க முடிந்தது'' என்று நன்றி கூறினர். அவரது ஞாபக சக்தி நிச்சயம் மனிதரால் சொல்லக் கூடியதே அல்ல.

Mrs. Sulakshana Rajagopal,
35, IInd Main Road, 'Kottur Gardens' MADRAS-85

## 77) நடுவீதியில் நமஸ்காரம்

திரு.ராஜகோபால்

'பெரியவா' மீது பூரண பக்தியும், ஈடுபாடும் எங்களுக்கு உண்டு. 1958ல் 'பெரியவா' ராமேஸ்வரம் ரோடில் தங்கியிருந்தார். இரவு பன்னிரண்டு மணியளவில் 'பெரியவா' ஜி.என்.செட்டித் தெரு வழியாக நடந்து வரப்போவதாக என் மாமனார் தெரிந்து கொண்டு வந்து சொன்னார். பலரும் அதற்குள் தட்டில் வெற்றிலை, பாக்கு, பழம், தேங்காயுடன் நிற்க ஆரம்பித்துவிட்டனர். எனக்குத் திருமணமாகியிருந்த சமயம் அது. 'பெரியவா' மளமளவென்று நடந்து வந்து கொண்டேயிருந்தார். நானும், என் மனைவியும் வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்தோம். திடீரென்று நான் ரோடிலேயே சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தேன். ஒரு நிமிடம் நின்று கையைத் தூக்கி ஆசீர்வாதம் செய்தார் எங்களைப் பார்த்து. நாங்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. இன்றும் அவர் அனுக்ரஹத்தால்தால் நல்லபடியாக வளர்ந்து கொண்டிருக்கிறோம்.

Mr.Rajagopal
35, IInd Main Road
'Kottur Gardens'
Madras-85



## 78) சுயமாய் ஜதி பிறந்தது!

திருமதி.ரங்கநாயகி ஜெயராமன்
(நிர்வாகி சரஸ்வதி கானநிலையம்)

சென்னை, திருவல்லிக்கேணியில் 'சரஸ்வதி கானநிலையம்' என்ற நாட்டியப்பள்ளியை நடத்தி வருகிறேன். என் அத்தை திருமதி லலிதா அவர்களால் ஆரம்பிக்கப்பட்டு ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இப்பள்ளி நடந்து வருகின்றது. சுமார் முப்பத்தி ஐந்து வருடங்கள் முன்பு பெரியவா சென்னை வந்தபோது ஹிந்து ஹைஸ்கூலில் தங்கியிருந்தார். பெரிய தெரு வழியாக அவர் நடந்து வரப் போவதை அறிந்தோம். என் கணவர் என்னையும், அத்தையையும் அழைத்துப் போனார். அவருக்குப் பெரியவரிடம் மிகுந்த பக்தி. அடிக்கடி காஞ்சிக்குப் போவோம். ஸ்ரீசக்ரம் வைத்து பூஜை செய்வார். இரவு பத்துமணியிலிருந்து அவர் வரும் வழியில் நின்று கொண்டிருந்தோம். 'பெரியவா' நடந்து வர, ஒரே கூட்டம். எல்லோருக்கும் கையைத் தூக்கி ஆசீர்வாதம் செய்தார். அவர் முகதரிசனம் கிடைத்ததும் எல்லோருக்கும் எல்லையில்லா மகிழ்ச்சி; காத்திருந்த சமயத்தில் பெரியவாளையே மனதில் தியானித்தபடி இருந்த என் அத்தைக்கு இரண்டு 'ஜதிகள்' கல்யாணி, தோடி ராகங்களில் தானாகவே மனதில் தோன்றியது. உடனே எழுதினார். எங்கள் நாட்டியப்பள்ளியில் ஆரம்ப காலத்தில் அந்த இரண்டு 'ஜதி'களும் மிகப் பிரபலமாக எல்லோராலும் வரவேற்கப்பட்டது. பெரியவாளை நினைத்தாலே, கூடவே என் மறைந்துபோன அத்தையும், அந்த 'ஜதி'களும் நினைவுக்கு வரும்.

Mrs.Ranganayaki Jayaraman
6, Thoppu Street
Triplicane, Madras 600 005






## 79) பிர்லா தந்த பத்து லட்சம்

**திருமதி ஜானா ராமகிருஷ்ணன்**

என் கணவரை 'மெயில்' ராமகிருஷ்ணன் என்று சொல்வார்கள். அவரது நண்பர் திரு.டி.கே.தியாகராஜன் அவர்கள் சொன்ன நிகழ்ச்சி இது. திரு.டி.கே.டி. எக்ஸ்பிரஸில் ஜெனரல் மானேஜராக இருந்தார். திரு. கோயங்காவிடம் பெரியவாளைத் தரிசிக்கப் போவதாக அனுமதி கேட்டதும், 'நானே செல்ல வேண்டும் என்று நினைத்தேன். போய் விட்டு வாருங்கள்' என்றார். காஞ்சியில் பெரியவாளைத் தரிசனம் செய்தபோது பத்துலட்சம் ரூபாய் வேண்டும் என்று கேட்டாராம். அதற்கு திரு.டி.கே.டி. திரு. கோயங்காவைக் கேட்காமல் சொல்ல முடியாததால். அவரிடம் சொல்கிறேன் என்று கூறி விடைபெற்றார். திரு. கோயங்காவிடம் அவர் இதுபற்றி சொல்லிக் கொண்டிருக்கும்போது, திரு. பிர்லா அவர்கள் வந்து, பத்துலட்சம் ரூபாய் காஞ்சிப் பெரியவருக்கு உடனே கொடுக்க நினைத்திருப்பதாகக் கூறியதும் இந்த ஆச்சர்யமான ஒற்றுமையை நினைத்து வியந்தனராம். திரு. பிர்லா அவர்களே காஞ்சி சென்று பணத்தை ஒப்படைத்தார்களாம். திரு.டி.கே.டி. தற்போது முரசொலி குரூப்பில் இருக்கிறார்.

**Mrs.Jana Ramakrishnan**
**176, Big Street**
**Triplicane, Madras - 5.**



## 80) ஹோட்டல் 'காஞ்சி'

**'மெயில்' திரு.ராமகிருஷ்ணன்**

கீதா குரூப் ஹோட்டல் வைத்துள்ள திரு.ஜெயராமன் அவர்களுடன் எனக்கு நெருங்கிய பழக்கம் உண்டு. அவரது

அனுபவத்தை அவரே சொன்னதை நான் சொல்கிறேன். 'கீதா ஹோட்டல்' பாண்டிபஜார், இப்போதுள்ள 'காஞ்சி' ஹோட்டல் பக்கம் இப்படி பல இடங்களில் இருந்தது. பெரியவாளைத் தரிசிக்க திரு.ஜெயராமய்யர் சென்றபோது ஹோட்டல்கள் நஷ்டத்தில் ஓடுவதாகச் சொல்லி வருத்தப்பட்டதும் 'பெரியவா', 'உன் ஹோட்டல்களில் ஒன்றில் அசைவ உணவு தயாரித்து வியாபாரம் செய்யப்படுகிறது. அதை நிறுத்தினால் சரியாகிவிடும்' என்றாராம். பிறகு அதேபோல அந்தச் சிறு ஹோட்டலில் அசைவ உணவுப் பகுதியை நிறுத்திவிட்டு 'காஞ்சி' என்று அவர் பெயராலேயே இப்போதுள்ள பிரபல ஹோட்டல் கட்டினார். நல்ல நிலைக்கும் வந்தார்.

**Mr.Ramakrishnan**
**176, Big Street, Triplicane, Madras - 5**



## 81) தொழிலில் முன்னேற்றம்

**திருமதி.மீனா சம்பத்**

'பெரியவா' பற்றிக் கேட்டவுடன் என் தந்தை சொன்ன ஒரு நிகழ்ச்சி ஞாபகம் வருகிறது. மயிலாப்பூரில் வேம்பு ஐயர் என்பவர் 'தேவி சில்க் ஸ்டோர்ஸ்' வைத்திருந்தார். வடக்கே லாரி டிரான்ஸ்போர்ட் கம்பெனியும் அவருக்கு இருந்தது. அமிஞ்சிக்கரையிலும் ஒரு கம்பெனி சொந்தம். அவரது மகன் திரு. குப்புசாமி ஒருமுறை 'பெரியவாளை'த் தரிசிக்கச் சென்றார். தொழில் ரொம்ப லாபகரமாக நடக்கவில்லையே என்று வருத்தப்பட்டார் 'பெரியவா'ளிடம். 'வீட்டிலே இந்துமதம் அல்லாத வேறு மதத்துப் படங்களை பூஜை அறையில் நீங்கள் மாட்டி வைத்திருக்கிறீர்கள். அவற்றை வேறு இடத்துக்கு

மாற்றுங்கள். நமது வழிபாடு, முறையாக சரிவர நடக்க வேண்டுமல்லவா?' என்றாராம். பெரியவா சொன்னது போல அங்கிருந்த பிற படங்களை அகற்றியதும் தொழிலும் முன்னேற்றமடைந்தது என்று என் தந்தையிடம் சொன்னார். தீர்க்கதரிசியாயிற்றே அவர்!



**Mrs.Meena Sampath**
**9/2, Chakrapani St Extension**
**West Mambalam**
**Madras 600 033**

## *82) 'அந்தம்மா ஏன் புலம்றா?' என்றார்*

**திருமதி சாந்தா வெங்கட்ராமன்**

நான்கு வருடங்களுக்கு முன் பெண் கல்யாணத்துக்கு உத்தரவு வாங்க் குடும்பத்துடன் சென்றிருந்தோம். என் மாமனாருக்குப் பெரியவாதான் குரு, தெய்வம் எல்லாமே. தும்மினாக்கூட 'பெரியவா' அனுமதி கேட்டுதான் நடக்கும். 'பெரியவா' எங்கள் வீட்டுக்கே வந்திருக்கிறார். 'கோ பூஜை' பண்ணியிருக்கிறார். நானே பூரண கும்பம் வைத்திருக்கிறேன். என் மாமனார் மறைந்தே பதினைந்து வருஷமாகிறது. இப்பவும் பூணூல், கல்யாணம் என்றால் கட்டாயம் காஞ்சிக்குச் சென்று ஆசி பெறுவோம். 'பெரியவா' ஆசி வழங்கிக்கொண்டிருக்க, வரிசை நகர்ந்துகொண்டிருந்தது. திடீரென பெரியவா எழுந்து உள்ளே போய்விட்டார். நின்றுவிட்டோம். அமெரிக்காவில் வேலையாயிருக்கும். பிள்ளைக்கு என் ஒரே மகளைத் திருமணம் செய்வதால் கொஞ்சம் மனக்கலக்கம். பிரசாதம் கொடுத்து ஆசி கூறினார். எனக்குத்தான் தனியாக ஆசி சொல்வாரோ? என்று ஆசை. மறுபடி வரிசையில் நின்றேன். இரண்டாம் முறையும் உள்ளே போனார். திரும்ப எப்போ வருவாரோ? ஐயர் வீட்டிலிருந்து கல்யாணம் சொல்ல வந்திருக்கான்னு யாராவது சொல்லுங்களேன். என்னையறியாமல் புலம்பினேன். மாமனார்

பெயரைச் சொல்லிப் புலம்பினேன். திரும்பினார்! 'அந்தம்மா ஏன் புலம்பறா? என் அதிர்ஷ்டத்தை எண்ணி வாயடைத்து நின்றேன். 'அட! ராஜகோபாலனா? பரம பக்தனாச்சே அவன். இருநூறு மைல்களுக்கு அப்பாலிருந்து பூஜைக்கு பூ அலங்காரத்துக்கு வந்துவிடுவானே! பேத்திக்கா கல்யாணம்! அமோகமா இருப்பா. நீ மாட்டுப்பெண்ணா! என்னிடம் பரமாச்சார்யாள் பேசுகிறார். கண்களில் தாரை, தாரையாக நீர். அவர் சந்நதியில் நின்ற நாள் இன்னும் மறக்கவில்லை. மட்டைத் தேங்காய் ஒன்றை ஆசிர்வதித்து என் பெண் கையிலே கொடுத்தார். நன்றாக இருக்கிறாள் அவள். என்ன பிரம்மாண்டமான ஞாபக சக்தி. நம்மையும் ஒரு பொருட்டாக மதித்து, அவர் பேசாவிட்டாலும் பார்வை நம் மீது விழுந்தாலே போதுமே! மந்திரம், தந்திரம், வித்தை எதுவும் இல்லை. அந்தரத்தில் பிரசாதம் வரவழைப்பதில்லை. கண்ணாடி போல **fragile** உருவம். விசஷ பார்வை தீட்சண்யம்! சதாப்தி சமயம் டி.வி.யில் பார்க்கும்போது கூட மரியாதையாகக் காலை மடக்கிப் பார்க்க வைக்கும் உருவம். கனகாபிஷேகத்தில் அவர் கண் மீது காசு விழும் போது நம்மையறியாமலேயே தடுக்கப் போகின்றது கை! நமக்காகவே இருக்க்றார். அவரை நம்புவோம். பிரத்யக்ஷய தெய்வம் அவர்.

**ஜய ஜய சங்கர! ஹர ஹர சங்கர!**





## 83) பெரியவரின் ஆக்ஞை

**திருமதி கமலா சங்கர்.**

என் மாமனாரின் அண்ணா காஞ்சி மடத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டவர். பாதபூஜை, பிட்சை செய்வது இப்படி மடத்திலேயே பெரும்பாலும் இருப்பார். அவருடைய மகளுக்கு இரண்டு வருடம் முன்பு சிறிது உடல்நிலை சரியாக இல்லாமல் இருந்தது. முப்பத்தியேழு வயதிருக்கும் அவளுக்கு. 'பெரியவா' இந்த வருடம் சதாபிஷேகம் செய்து கொள் என்றார். மறுவருடம் தானே முறைப்படி நடக்க வேண்டும். ஏன் முதல் வருடமே செய்துக் கொள்ளச் சொல்கிறாரே என்று நினைத்தாலும் 'பெரியவாள்' ஆக்ஞைப்படி சீரும் சிறப்புமாக சதாபிஷேகம் செய்து கொண்டு மகிழ்ந்தார். அடுத்த வருடத்துக்குள் அவரது மகள் தவறிவிட்டாள். தீர்க்கதரிசியான 'பெரியவாள்' சொன்னதன் காரணம் இப்போதுதான் புரிந்தது.

**Mrs. Kamala Shankar**
**9/2, Chakrapani Street Extension,**
**West Mambalam,**
**Madras - 33.**



## 84) வழக்கு வென்றது

**திரு.சி.எஸ்.சந்திரசேகர் (அரசு கருவூல அதிகாரி)**

நான் சிறுவனாக் இருந்தபோது திருவல்லிக்கேணி வசந்த மண்டபத்தில் 'பரமாச்சார்யாள்' தங்கும் போது சென்று தரிசிப்பது வழக்கம். நான் முதலியார் வகுப்பைச் சேர்ந்தவறாக இருந்தாலும் ஹிந்து உயர்நிலைப் பள்ளி மாணவனாக இருந்ததாலும், பல பிராமண நண்பர்கள் இருந்ததாலும் அவர்களது வழக்கப்படியே கூட சென்று வருவேன். நான் மணந்ததும் ஒரு பிராமணப்பெண்ணைத்தான். அரசு நிதித்துறையில் பிரிவு அலுவலகராக இருந்தபோது சரியான

காரணம் கூறாமல் எனக்கு பிரமோஷன் நிராகரிக்கப்பட்டது. உயர் நீதிமன்றத்தில் வழக்குத் தொடர்ந்தேன். எனக்கு சாதகமாகத் தீர்ப்பு அமைந்தது. காழ்ப்பு உணர்ச்சி காரணமாக 'டிவிஷனல் பெஞ்சு'க்கு மேல்முறையீடு செய்து காலதாமதமாக்கினார்கள். 'பெரியவாளை'த் தரிசனம் செய்ய நினைத்து மூன்று நாட்கள் தொடர்ந்து போயும் தரிசிக்கமுடியவில்லை. நான்காம் நாள் குறுக்குவழியாகப் போய் காலில் விழுந்து நமஸ்கரித்தேன். என் குறையை உதவியாளர் மூலம் சொன்னேன். ஆசி கூறி, பழமும் கொடுத்தார். சாதாரணமாக மேல் முறையீடு செய்த வழக்குகள் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட சில ஆண்டுகளாவது ஆகும். காஞ்சியிலிருந்து திரும்பி வந்த மறுநாள் ஹைகோர்ட்டுக்குப் போய் வக்கீலைப் பார்த்தேன். உங்கள் வழக்குதான் இன்று முதல் வழக்காக எடுத்துக் கொள்ளப்பட்டு, தீர்ப்பும் அளிக்கப்பட இருக்கிறது என்று குமாஸ்தா சொன்னதும் ஆச்சரியத்தில் வார்த்தைகளே வரவில்லை. மாண்புமிகு நீதிபதி திரு.மோகன் அவர்கள், 'அரசு தரப்பு வழக்கறிஞரது வாதத்தை மட்டுமே கேட்டு அரசு நடவடிக்கை எடுத்தது தவறு' என்றும் எனக்கு பதவி உயர்வும், அதன் திரண்ட பயன்களையும், அளிக்க வேண்டும் என்றும் தீர்ப்பை வாசித்தார். என் தரப்பு வக்கீல் வாதாடவே இல்லை. இதன் தொடர்ச்சியாக கருவூல அதிகாரியாக '90 ல் ஆறுமாத பயிற்சிக்கு காஞ்சிபுரமே அனுப்பி வைத்ததை என்னவென்று சொல்வது? அங்கிருந்த ஆறுமாதமும் பெரியவாளை தரிசித்து மகிழ்ந்தேன். பயிற்சி முடிந்து குடும்ப சூழ்நிலையால் வெளியூர் செல்லமுடியாத நிலையில், பிரமோஷனைத்தான் தவிர்க்கவேண்டும் என்று நினைத்தபோது பெரியவாளை வேண்டிக் கொண்டபடி அதே காஞ்சிபுரத்தில் தொடர்ந்து பணியாற்றச் சொல்லி நியமன ஆணை வந்ததும்

அவரது பேரருளாள்தானே! 91-92 வரை கருவூல அதிகாரியாக சிறப்பாகப் பணிபுரியவும் முடிந்தது. நடமாடும் தெய்வம். கண்கண்ட தெய்வம் அவர்!

**Mr.C.S.Chandrasekhar**
**A-13, Geethanjali**
**256, Loyds Road**
**Gopalapuram**
**Madras 600 086**



## 85) வீடு விற்காமல் திண்டாடினோம்

**திருமதி ஜெயலக்ஷ்மி**

அறுபது வருஷங்கள் முன்பு 'பரமாச்சார்யாள்' கச்சாலிஸ்வரர் அக்கிரஹாரத்துக்கு வந்து தங்கியிருந்தார். என் அப்பா 'பாரி' கம்பெனியில் வேலையாக இருந்தார். 'பாரி' சுப்பிரமணிய ஐயர் என்று சொல்வார்கள். 'பெரியவா' வந்தால் தங்க இடமும், உணவு, பூஜைக்கு வேண்டியது எல்லா ஏற்பாடுகளும் அப்பாதான் செய்வார். ஒருமுறை எந்த ஏற்பாடும் இல்லாமல் எதிர்பாராமல் 'பெரியவாருக்கு'ப் பாதபூஜை கூட செய்தோம். நினைத்தால் காஞ்சிபுரம் போவோம். இப்போது நான் உள்ள இடம் பழைய கட்டிடமாக இருந்ததை விற்க நினைத்தோம். மாடியில் ஒருவன் குடியிருந்து கொண்டு இரண்டரை வருடங்களாக வாடகையே தரவில்லை. வாசற்பக்கத்தில் இருந்த 'கார் மெக்கானிக்' ஷாப் வைத்திருந்தவனும் ஒன்பது வருடங்களாக இருப்பதால் அடவாடி' செய்து கொண்டு கிளம்ப மறுத்தான். இரண்டு, மூன்று முறை 'பெரியவாளை'த் தரிசனம் செய்துவிட்டு வந்தேன். இப்போது இருவரும் பணத்தை வாங்கிக் கொண்டு காலி செய்தனர். நாங்களும் பிளாட் கட்டுபவர்களிடம் விற்று

பிளாட்டும், பணமும் பெற்றோம். வருடக்கணக்காக விற்க முடியாமல் திண்டாடிப் போகும் நிலை ஏற்படாமல் அனுக்ரஹம் செய்து காப்பாற்றினார் 'பெரியவாள்'.

**Mrs. Jayalakshmi,**
**41, Pinjala Subramaniam St.,**
**T. Nagar**
**Madras - 17**



## 86) நடுவழியில் உதவினார்

### திருமதி மீனாட்சி நரசிம்மன்

என் மாமனார் புளியங்குடி சிந்தாமணி ராமசுவாமி சாஸ்திரிகள் நான்கு வேதமும், ஆறு சாஸ்திரங்களும் அறிந்த வேத விற்பன்னர். 'பரமாச்சார்யாள்' அவர்களுடன் தர்க்கசாஸ்திரம் புரிந்து வெகுமானங்கள் பல பெற்றவர். நானும் இருபத்தி ஐந்து வருடங்களாகப் 'பெரியவாளை'த் தரிசிக்கச் செல்வதை வழக்கமாக வைத்துள்ளேன். நானும், சிநேகிதிகளும் நினைத்தால் காலை ஐந்து மணி பஸ்ஸுக்குக் கிளம்பிவிடுவோம். ஒருமுறை தரிசனம் செய்தபோது 'பெரியவாள்' கையை முறுக்கிக் காண்பித்தார். முறுக்கி நாடா? என்று சமிக்ஞையல் கேட்டார். ஆமாம் என்றதும், என் மாமனாரைப் பற்றி விசாரித்தார். 'நான்கு பிள்ளைகள் அவருக்குயார் அவரது பிரவர்த்தியைத் (தொடர்ந்து வேத பாராயணம், பூஜை செய்வது) தொடர்ந்து செய்கிறார்கள்? என்று கேட்டார். கடயநல்லூரில் உள்ள மைத்துனர் செய்வதாகக் கூறினேன். இப்படி, நம் குடும்பம் பற்றி மிகவும் சிரத்தையோடு, தெளிவாக, ஞாபகசக்தியுடன் விசாரிப்பார். அல்லும் பகலும் அனவரதமும் பெரியவாதான் எனக்கு எல்லாம். ஒருமுறை கலவையில் இருந்த 'பெரியவாளை'த் தரிசிக்க நினைத்து ஐந்தாறு தோழிகளாகக் கிளம்பியதும் வழியில் கார் டயர் பஞ்சர் ஆகிவிட்டது. எந்த ஒரு வாகனமும், அதிக நடமாட்டமும் இல்லாத பகுதி அது. பெரியவாளைத் தரிசிக்க

வந்தோமே! நல்லபடியாக தரிசிக்க வேண்டுமே என்று அவரை மனமுருக வேண்டிக் கொண்ட சமயம் சென்னை ராமச்சந்திரா ஜுவல்லரி சொந்தக்காரரின் கார் வந்தது. ஸ்டெப்னி கொடுத்து உதவினார். திரும்ப வரும்போது காஞ்சியில் திரும்பிக் கொடுத்து விடுவதாகக்கூறினோம். நல்ல தரிசனமும்கிடைத்தது. டயரையும் சொன்னபடி காஞ்சியில் வந்திருந்த அவரிடம் திருப்பிக் கொடுத்தோம். எல்லாம் அவர் அனுக்கிரஹம்தான்.

**Mrs. Meenakshi Narasimhan**
**7, Bandala Venugopala Naidu St.,**
**Triplicane,**
**Madras - 5.**



## 87) நல்ல சகுனம் கிடைத்தது

***திருமதி வித்யா சங்கர் (தொழிலதிபர்) சுப்ரீம் கோர்ட் ஜட்ஜ் திரு. டி.எல். வெங்கட் ராமய்யரின் பேத்தி***

எங்கள் குடும்பத்தில் பரமாச்சார்யாள் மீது மிகுந்த பக்தி உண்டு. 1981ம் வருஷம் நான் இப்போது இருக்கும் பங்களாவுக்குக் குடிவந்தேன். அதைக் கட்டி முடிப்பதற்குள் நான்பட்ட பாடு 'பெரியவாளுக்கே' தெரியும். திட்டமிட்டிருந்ததை விட இரண்டு மடங்காகி விட்டது செலவு. இனி விற்பதற்கு பெரும் பொருள், நிலம் எதுவுமில்லை. கான்ட்டிராக்டரின் மகன் ஒருசமயம் என்னிடம் வாங்கிய பணத்தில் சிங்கப்பூருக்கு ஜாலியாக டூர் சென்று வந்தான். வீட்டை முக்கால்வாசி முடித்துவிட்டு மெயின் கதவை வைக்கவில்லை. குடிபோக முடியாதபடி இடைஞ்சல் செய்தான். கடைசியாக ஒரு பெரும் தொகை கேட்டான். இப்போதுள்ள அனுபவமும் பக்குவமும் அப்போதில்லை. வீடு முடிந்ததுவிடும் என்று எழுதிப் போட்டு விட்டதால் அப்போது நாங்கள் குடியிருந்த வீட்டு சொந்தக்காரரும் வந்து காலி செய்யும்படி கேட்க ஆரம்பித்துவிட்டார். மனம்புழுங்கி வேதனைப்பட்டு நின்ற வேளையில் ஒருநாள் மாமனாரிடம் 'வாருங்கள்! வீட்டைப் போய் பார்த்துவிட்டு வரலாம். எந்த நிலையில் உள்ளது. அட்ஜஸ்ட் செய்து கொண்டு இருக்க

முடியுமா? இப்படி வேதனைப்படுவதைவிட அங்கு திருட்டு பயத்தைச் சமாளிப்பது ஒன்றும் கஷ்டமாக இருக்காது' என்று கூறி காலை ஆறு மணிக்கெல்லாம் புறப்பட்டுச் சென்று வீட்டை சுற்றிப் பார்த்துவிட்டு, இங்கு வந்து இருந்து கொண்டு மீதி வேலைகளை முடிக்க முடியுமா? என்று நினைத்துக் கொண்டே வெளியே வந்தோம். அப்போது அந்தக்காலை நேரத்தில் தெருவில் ஜன நடமாட்டம் அதிகமில்லாத சமயம் பத்து, பன்னிரண்டு வயது மதிக்கத்தக்க சிறுவன் ஒருவன் வந்து 'அம்மா படம் வாங்கிக்கறீங்களா' என்றான். என் கையில் கொடுத்து விட்டு ஐம்பது பைசா என்றான். பிரித்துப்பார்த்தால் 'பரமாச்சார்யாள்' படம் அது. என் மாமனாருக்குக் கண்ணில் ஜலமே வந்துவிட்டது. மறைந்து விட்டான். நாங்களும் நல்ல சகுனம் இதுவென்று நினைத்து நல்லநாள் பார்த்து கிரஹப் பிரவேசம் செய்தோம். அன்று முதல் மேன்மேலும் சிறப்பாகவே இருக்கின்றோம். அன்றைய குழப்பத்தை, வேதனையை நினைத்தால் இன்றும் மனம் கசப்பாகத்தான் உணரும். அதை இனிய நினைவாக மாற்றியது பெரியவாள் அனுக்கிரஹம்தான்.

**Mrs. Vidya Shankar**
**4, 'D' Salva Road**
**Mylapore**
**Madras - 600 004**

## 88) குழந்தைக்கு தந்த ஆப்பிள்

**திருமதி. என். சகுந்தலா**

சுமார் முப்பத்தி ஐந்து வருடங்களுக்கு முன், நானும், என் கணவரும், காஞ்சிப் 'பெரியவாளை' தரிசிக்கச் சென்றபோது, என் இரண்டாவது மகனையும் அழைத்துச் சென்றோம். அவனுக்கு அப்போது ஒன்றரை வயது. குழந்தையைக் கீழே விட்டுவிட்டு தம்பதியாக நாங்கள் நமஸ்காரம் செய்யும் சமயம் குழந்தை தவழ்ந்து சென்று 'பெரியவாளின்' மடியில் அமர்ந்துவிட்டது. நான் நிமிர்ந்து பார்த்தபோது குழந்தை அவர்

-மடி மீது இருந்ததும். பதறி ஓடிச் சென்று தூக்க முயன்றபோது, அவர் தன் அருகில் இருந்த மூங்கில் தட்டிலிருந்து ஓர் ஆப்பிளை எடுத்துக் குழந்தை கையில் கொடுத்தார். எனக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது. அவன் பெயரும் சந்திரசேகரன்தான். துபாயில் நல்ல வேலையில் இருக்கிறான். மற்றொரு சமயம் கோயம்பேடு அருகில் முகாம் இட்டிருந்த பெரியவாளைத் தரிசிக்கச் சென்ற போது திரண்ட கூட்டம். நான் எங்கோ பின்னாலிருந்துதான் பார்க்க முடிந்தது. அப்போது அவர் திருஷ்டி என் மீது பட்டு சமிக்ஞையால் நாலு விரல்களைக் காட்டி ஆசி கூறினார். எனக்கு அப்போது நான்கு மகன்கள், நம் நான்கு குழந்தைகளையும் தான் ஆரிர்வதித்தார் என்று சந்தோஷமாக வீட்டுக்கு வந்தேன். நான்கு பேரும் நல்ல வேலையில் இருக்கின்றனர். 'பெரியவாள்' ஆசி என்றும் எனக்கு இருக்க வேண்டுமெனப் பிரார்த்தித்துக் கொள்கிறேன்.

**Mrs. N. Sakunthala**
**C/o. Chandrasekaran**
**21/3, Chari St.,**
**T. Natar,**
**Madras - 17.**



## *89)* அம்மனை நாதத்தால் அலங்காரம் செய்கிறாய்" என்றார்.

*திருமதி லக்ஷ்மி சங்கர் (மஹாராஜபுரம் விஸ்வநாதய்யர் அவர்களின் பேத்தி)*

*1958*ம் வருடம் வஸந்த நவராத்திரி விழா நுங்கம்பாக்கத்தில் இரு பக்தரின் வீட்டில் நடைபெற்றுக் கொண்டிருந்தது. எனது தாத்தா பிரபல சங்கீத வித்வான் மஹாராஜபுரம் விஸ்வநாதய்யர் அவர்கள் மிக உற்சாகமாகப் பாடிக் கொண்டிருந்தார். அதில் 'வினாயகுனி' என்ற மத்யமாவதி கீர்த்தனம் பாடும்போது 'அனாதரக்ஷகி காமாக்ஷி' என்ற பல்லவியை மிக விஸ்தாரமாக அனுபவித்துப் பாடினார். அதைக்கேட்டு அங்கிருந்த

'பரமாச்சார்யாள்' காமாக்ஷி அம்மனை நாதத்தால் அலங்காரம் செய்யும் உன் உடலில் அவள் ரத்தம் ஓடுகிறது. அனாவசியமாக யாரையும் கடுமையாகப் பேசிவிடாதே பலித்துவிடும் என்று எச்சரித்திருந்தார். ஒரு சங்கடமான சமயத்தில், இந்த புத்திமதியை மறந்து என் தாத்தா ஒருவரைக் கடுமையாகத் திட்ட சில வருடங்கள் கழித்து அப்படியே பலித்துவிட்டதை நினைத்து அதிர்ச்சி அடைந்தேன். மேலும் எனது உறவினர் ஒருவருக்குப் புற்றுநோய் வந்து பிழைப்பதே அரிது என்று பிரபல மருத்துவர்களால் கைவிடப்பட்டதும் பெரியவாளை தரிசித்தார். அவரைச் சரணடைந்தார். அவரது ஆசியாலும், அனுக்கிரஹத்தாலும் ஆபரேஷன் செய்து கொண்டு பதினைந்து வருடங்களாக பூரண ஆரோக்கித்துடன் இருக்கிறார். இதைவிட சாட்சி நமக்கு என்ன வேண்டும்? நடமாடும் தெய்வம் அவர்!

**Mrs. Lakshmi Shankar,**
**4, Coats Road,**
**T. Nagar,**
**Madras - 17**



## 90) பெரியவா முன் பாட்டு

**திருமதி பிரேமா ஹரிஹரன்**
***(பிரபல கர்நாடக இசைக் கலைஞர்)***

என்னுடைய சிறு வயது முதல் எங்கள் குடும்பத்திற்குச் சிறந்த துறவிகளுடைய தொடர்பும், அனுக்கிரஹமும் கிடைத்து வந்துள்ளது. காஞ்சி மாமுனிவரின் அனுக்கிரஹம் கிடைத்ததும் பெரும் பாக்கியம் என்றே மகிழ்கிறேன்.

1958 ம் ஆண்டு 'பெரியவா' ராமேஸ்வரம் ரோடில் தங்கியிருந்தார். பக்தர்கள் பலரும் ஒவ்வொரு நாளும் பிட்சாவந்தனம் செய்தனர். என் தாயாரின் மாமா (கணேஷ் அண்ட் கம்பெனி, காப்பிக்கொட்டை வியாபாரம்) ஒருநாள் பிட்சாவந்தனம் ஏற்றுக்கொண்டதால் குடும்பத்தினர் அனைவரும் பூஜையில் பங்கேற்றோம். நான் பெரியவாளுக்கு

நமஸ்காரம் செய்தபோது என் மாமா, தாத்தா 'இவள் என் தங்கை பேத்தி பாடுவாள்' என்றதும் 'அப்படியா, சாயங்காலம் பூஜையில் பாடட்டும் என்றார் பெரியவா 'மைக் ஏற்பாடு செய்யலாமா? என்றதும் 'மைக்கா? வேண்டுமா? மைக் இருந்தால் கீர்த்தி வரும். மைக் இல்லாமல் பாடினால் அம்பாளின் அனுக்கிரஹம் கிடைக்கும். உனக்கு எது வேண்டும்? என்று சிரித்தார். அம்பாள் அனுக்கிரஹம் இருந்தால் எல்லா கீர்த்திகளும் தேடி வருமே என்ற அர்த்தம் அந்த சிரிப்பில் தொனித்தது. மாமா, தாத்தா பதறினார். 'மைக் வேண்டாம். பூஜையில் பாடட்டும்' என்றார் பெரியவா. மாலை ஜெயந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் பூஜை செய்து கொண்டிருந்தபோது 'பெரியவா' பக்கத்தில் அமர்ந்திருந்தார். மேடைக்குக் கீழ் அமர்ந்து மூன்று பாட்டுகள் பாடினேன். பெரியவா அழைத்தார் 'உன் பெயர் என்ன' 'பிரேமா' என்றேன். 'சுப்பையருக்குத் தங்கை பேத்திக்கு சங்கரி பேத்தியா. சங்கரி ஸ்ரீ ரங்கத்தில்தான் இருக்கிறாளா' என்றார் 'ஆமாம்' என்றதும் 'உட்கார்ந்து இன்னும் இரண்டு பாட்டு பாடு' என்றார். பாடினேன். மறுபடி அழைத்து 'என்ன பாடப் போகிறாய்? என்றதும் 'சங்கராச்சார்யம் பாடட்டுமா' என்றேன். 'சரி பாடு' என்றவர் சீடரைக் கூப்பிட்டு சமஸ்கிருதத்தில் ஏதோ சொன்னார். சீடர் மைக் அருகே சென்று 'உங்களை எல்லாம் ஸ்வாமிகள் அமைதியாக இருந்து இந்தப் பாட்டைக் கேட்கச் சொல்கிறார்' என்றதும், அலைமோதிக்கொண்டிருந்த கூட்டம் அமைதியானது. 'பாடு' என்றார். மங்களம் பாடி முடித்ததும் ஒரு மரத்தட்டில் ரோஜாப்பூ, குங்குமம் வைத்துக் கொடுத்தார். பதினாறு வருடங்களுக்கு முன்பு பெரியவா தேனம்பாக்கத்தில் தங்கியிருந்த சமயம் நான், என் கணவர், என் தந்தை மூவரும் தரிசிக்கச் சென்றோம். ஆசிரமம் வாசல் வரை பஸ் சென்றது. ஸ்வாமிகளுக்கு உடல்நிலை சரியில்லாததால் இன்று தரிசனம் முடிந்துவிட்டது. இனி நாளைதான் என்று சொல்லிவிட்டனர். மிகவும் வருத்தமடைந்தோம். திரும்பி விட நினைத்தபோது என்

தந்தை வந்துவிட்டோம். நீ இரண்டு பாட்டு பாடு. 'பெரியவா' காதில் உன் பாட்டு விழுந்தாலே உனக்குப் புண்ணியம்தானே என்றார். நான் பாட ஆரம்பித்தேன். என்ன ஆச்சரியம்! 'மஹா பெரியவாள்' உள்ளேயிருந்து வெளியே வந்தார். ஒரு மணையைப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தார். பாட்டை நிறுத்தியதும், 'ஆயிற்றா' என்று தலையை ஆட்டினார். மகிழ்ச்சியுடன் 'ஆமாம்' என்றேன். எங்களைப் பார்த்து அபயஹஸ்தம் செய்துவிட்டு உள்ளே சென்றார். அவரது எல்லையற்ற பெருந்தன்மையை என்ன சொல்வது?

*1983* ம் ஆண்டு 'பெரியவரது' *90* வது 'ஜயந்தி' அவர் அவதரித்த திருத்தலமான விழுப்புரத்தில் விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. நான் கச்சேரி செய்யும் பாக்கியமும் கிடைத்தது. குழந்தைகளுக்காக நான் பாடி வெளியிட்டுள்ள 'சின்னச் சின்ன ஸ்லோகங்கள்' காஸட்டை சில ஆண்டுகள் முன் உடல்நலம் குன்றியிருந்த நிலையிலும் தன் திருக்கரத்தால் வாங்கி அனுக்கிரஹம் செய்து கொடுத்ததை நான் ஆயுளுக்கும் மறவேன்!

**Mrs. Prema Hariharan,**
**15, Dr. Thomas Rd.**
**T. Nagar, Madras - 17**
**Ph : 447759**




## *91)* வருமானம் வந்தது

**திருமதி நாகலட்சுமி**

எனது மாமா திரு. சுந்தர சாஸ்திரிகள், நாகப்பட்டினத்தில் வைதீக காரியங்கள் செய்து வந்தார். சில ஆண்டுகளுக்கு முன் அவருக்கு அறுவைசிகிச்சை ஒன்று நடந்தது. அதன் பிறகு வீட்டுக்குத் திரும்பி வந்து பார்த்தால், அவர் செய்து வந்த வைதீக காரியங்களை அந்த ஊரில் உள்ளவர்கள் வேறு ஒருவருக்குக் கொடுத்துவிட்டனர். யாருமே இவரைத் திரும்ப அழைக்காததால் வருமானம் நின்றுவிட்டது. உடனே அவர் 'பரமாச்சார்யாளிடம்' சென்று நடந்ததைக் கூறினார். 'நீ சில

மாதங்கள் இங்கு தங்கினால் எல்லாம் சரியாகிவிடும் கவலைப்படாதே' என்று சொல்லிவிட்டார். அதன்படியே அவரும் நடந்து வந்தார். சில மாதங்கள் கழிந்தவுடன் சொந்த ஊருக்குத் திரும்பிய அவரை, வைதீக காரியங்களுக்கு அழைக்க வேண்டாம் என்று கூறியவர்களே மீண்டும் அழைத்தனர். வருமானமும் வந்தது. இப்பொழுதும் கொரட்டூரில் நல்ல முறையில் வைதீக காரியங்கள் செய்து கொண்டிருக்கிறார். எல்லாம் 'பெரியவா' அனுக்கிரஹத்தால்தானே!

Mrs. Nagalakshmi
C/o. Thiagarajan,
20, Sidco Industrial Estate,
Ambattur,
Madras - 98



## 92) 'பெரியவா' சொன்ன புத்திமதி

*திரு சங்கர் - (தொழிலதிபர்) (பிரீமியர் பஃர்னஸ் பிரைவேட் லிமிடட் நிறுவன டைரக்டர்)*

சுமார் முப்பத்தி ஐந்து வருடங்கள் முன்பு 'காஞ்சி பெரியவர்' திருச்சியில் முகாம் இட்டிருந்தார். 'நேஷனல் ஹைஸ்கூலில்' பதினைந்து நாட்கள் பிரசங்கம் செய்தார். ஒருநாள் மாலை நிகழ்ச்சி முடிவடையும் சமயம், ஒரு பெண்மணியின் சங்கிலி களவாடப்பட்டிருப்பது கண்டுபிடிக்கப்பட்டு 'பெரியவாளு'க்குத் தெரிவிக்கப்பட்டது. உடனே பெரியவா போலீஸ் அதிகாரிகளிடம் சொல்லி யாரும் வெளியேறிவிடாமல் பாதுகாக்கச் சொல்லிவிட்டு மைக்கில் சங்கிலியை எடுத்தவர் அதன் உரிமையாளரிடம் திருப்பிக் கொடுக்கும்படி பலமுறை வேண்டுகோள் விடுத்ததுடன், அவருக்கு எந்தவித சங்கடமும் நேராமல் தான் பார்த்துக் கொள்வதாகவும் வாக்களித்தார். அப்படியும் ஒருவரும் முன்வராததால், அனைவரையும் வரிசையாகத் தம்மிடம் வரவழைத்து குங்குமப் பிரசாதமும், தீர்த்தமும் அளித்து அருளாசியுடன் வெளியே அனுப்பினார்.

இப்படி அனுப்பும்போது வரிசையில் வந்த ஒரு பெண்ணிடம் 'ஏம்மா! வீட்டில் எத்தனை கஷ்டங்கள் இருந்தாலும் இந்தக் காரியத்தை செய்யலாமா? பொருளைப் பறிகொடுத்தவா மனசு என்ன பாடுபடும்' என்று கேட்டதும், அவள் கதறியபடி அவர் காலில் விழுந்து தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தாள். சங்கலியை அவளிடமிருந்து வாங்கி உரிலயவரிடம் ஒப்படைத்துவிட்டு அழுது கொண்டிருந்த அவளுக்கு ஒரு அபவாதமும் வராமல், காவலாளிகளிடமும் ஒப்படைக்காமல், சமாதானம் செய்து, அறிவுரை கூறி அவள் கஷ்டம் விரைவில் தீரும் என்று ஆசியும் வழங்கி, அனுப்பிவைத்தனர். இப்பேற்பட்ட மகான் வாழும் இந்த உலகத்தில் நாமும் வாழும் பேறு கிடைத்ததை எண்ணி நெஞ்சு மகிழ்கின்றது.

**Mr. Shankar,**
**4, 'D' Selva Road**
**Mylapore**
**Madras 4**



## *93) ஆபத்து நீங்கியது!*

**திருமதி மீனாட்சி கிரிதரன்**

நடமாடும் தெய்வமாக விளங்கி வரும் 'பரமாச்சார்யாளின்' பேரருளைப் பெற்றவர்களுள் என் குடும்பமும் ஒன்று. 'பெரியவாளை'க் காஞ்சிக்குச் சென்று அடிக்கடி தரிசித்து வருவது எங்கள் பழக்கம். ஒரு சமயம் என் ஒன்றுவிட்ட பெரியப்பா காரில் சென்று கொண்டிருந்தபோது எதிரில் வந்த லாரி, கார் மீது மோதியதில் உடல் முழுவதும் பலத்த காயம் ஏற்பட்டு உயிருக்கே ஆபத்தான நிலையில் மருத்துவமனையில் அட்மிட் செய்யப்பட்டார். என்னுடைய பெரியம்மா, உடனே காஞ்சிபுரம் சென்று 'பெரியவாளை'த் தரிசித்து நடந்ததைக் கூறி கதறி அழுதாள். 'பெரியவா' நீ எதற்கும் கவலைப்படாதே, அவர் பிழைத்து எழுந்து விடுவார்' என்று ஆசி கூறி பிரசாதமும் அளித்தார். டாக்டர்களே வியக்கும்வண்ணம் விரைவில்

குணமடைந்து இன்றும் நல்லபடியாக ஆரோக்கியமாக இருக்கிறார் என்றால் 'பெரியவாளின்' அருள் ஆசிக்கு நிகரேது?

**Mrs. Meenakshi Giridharan,**
**9, Sakthi Nagar, Ayapakam,**
**Madras - 77**



## 94) பெரியவா அருகிலே இருந்த பாக்கியம்

**திருமதி நீலாம்பாள்**

எனக்கு 92 வயதாகிறது. 'பெரியவா' மீது தீவிர பக்தியுண்டு; அவரைப் பலமுறை காஞ்சிக்குச் சென்று தரிசித்து வந்துள்ளேன். தஞ்சாவூரில் மெலட்டூரில் இருக்கிறேன். பெரியவாளின் 'சதாப்தி' ஜெயந்தியில் கலந்து கொள்ள விரும்பி எல்லோரிடமும் வீட்டில் தெரிவித்தேன். 92 வயதுக் கிழவியை அந்தக் கூட்டத்தில் எப்படி அழைத்து செல்வது? என்றும், அப்படியே சென்றாலும் தூரத்தில் நின்று தரிசிப்பதே கடினம் என்றும் மறுத்துவிட்டனர். நீங்கள் அழைத்துப் போகாவிட்டாலும், நானே போய் பெரியவா ளைத் தரிசித்துவிட்டே வரப்போகிறேன் என்று பிடிவாதமாகப் பேத்தியைத் துணைக்கு அழைத்துக் கொண்டு தஞ்சையிலிருந்து காஞ்சிக்குக் கிளம்பிப் போனோம். தற்செயலாக உறவினர் ஒருவர் 'பெரியவருடனேயே இருப்பவர் என்னைப் பார்த்துவிட்டு 'பெரியவாளிடம்' அழைத்துப் போனார். நான்கு நாட்கள் அங்கு தங்கி 'பெரியவா' அருகிலேயே இருந்து அவரது 'சதாப்தி' வைபவத்தைக் கண்டு களித்தேன். 'பெரியவரே' தன் கையால் ஒரு உல்லன் சால்வையும், நான்கு பழங்களும் கொடுத்ததை மிகப் பெரும் பாக்கியமாகக்கருதுகிறேன். இந்த சால்வையை ஜபம் செய்வதற்கு வைத்துக் கொள்' என்று கூறி வழங்கினார். 'பெரியவா' சதாப்தி ஜயந்தி சமயம் அத்தனை கூட்டத்தில் சாதாரணமாக அவரைத் தரிசனம் செய்வதே அரிதாக இருக்கும் போது அவருடனேயே தங்கி, பிரசாதமும், ஆசியும் பெற்றதை என் உயிருள்ளவரை மறக்க முடியாது. முதுமையினால். முதுகுவலி, இடுப்புவலியால் தூக்கம்

வராமல் இரவில் அவஸ்தைப்பட்டுக் கொண்டு விக்ஸ், அயோடக்ஸ் என்று மாற்றி மாற்றித் தேய்த்துக் கொண்டிருக்கும் நான், அந்த நான்கு நாட்களில் ஒரு முறை கூட மருந்துகளைத் தேடாமல் நன்றாக உறங்கித் தெம்பாக இருந்ததும் ஆச்சரியப்படவைத்தது. அவரது அருளாசியே இதற்கெல்லாம் காரணம் என்பதை நான் சொல்லித்தானா தெரியவேண்டும்.

**Mrs.Neelambal**
**C/o.Meenakshi Giridharan**
**9, Sakthi Nagar**
**Ayappakkam**
**Ms-77**



## 95) காமாக்ஷியைக் கண்டோம்

### திருமதி. லலிதா பாலசுப்ரமணியம்

'பரமாச்சார்யாளின்' ஜயந்தி அன்று ஒவ்வொரு ஆண்டும். ஹோமங்கள், பூஜைகள், நற்காரியங்கள் செய்துவரும் பி.டி. பாணி ஐயர் அவர்கள் வீட்டினர் நடத்தும் பூஜையில் நான் பலமுறை சுவாசினியாக அமரும் பாக்கியம் பெற்றுள்ளேன். ஒரு குறிப்பிட்ட ஆண்டில் ஹேமமாலினி கல்யாண மண்டபத்தில் பூஜை முடிந்து வீடு திரும்பும் வேளையில் சில சுவாசினிகள் அங்கு நின்று கொண்டிருந்த பஸ்ஸில் போய் அமர்ந்ததைப் பார்த்துக் காரணம் விசாரித்தபோது ஏற்கனவே பணம் செலுத்தி ரிசர்வ் செய்து கொண்டு 'பெரியவாளை'த் தரிசிக்கக் காஞ்சிபுரம் போவதாகவும் அறிந்து மிகவும் மனம் வேதனைப்பட்டது. முன்னதாகவே தெரிந்திருந்தால் நானும் என் சிநேகிதியும் அவர்களுடன் போயிருக்கலாமே! பெரியவாளைத் தரிசிக்க முடியாத பாவி ஆகிவிட்டேனே என்று துயரத்தால் அழுகையே வந்துவிட்டது. ஒவ்வொரு பஸ்ஸாகக் கிளம்பிப் போய்விட்டது. கடைசி பஸ் கிளம்பும் சமயம் எங்களது நண்பர்களில் ஒருவர் ஏன் நின்று கொண்டிருக்கிறீர்கள்? என்று கேட்க முன் பணம் செலுத்தாததால் நாங்கள் போகமுடியாத காரணத்தை

சொனனதும். அவர்கள் 'நாங்கள் வாலன்டியர்கள். எங்கள் இடத்தில் நீங்கள் உட்காருங்கள். நாங்கள் நின்று கொண்டே வருகிறோம்' என்றனர். பெரியவாளை நினைத்த வினாடியில் அவரது பேரருள் கிடைத்த பேற்றினை எண்ணி மகிழ்ந்தோம்.

'கலவை'யில் இருந்த பெரியவாளைதரிசிக்க வரிசையில் நின்று கொண்டிருந்தோம். எனது முறை வந்து கொண்டிருந்த போது என்னுடைய வேண்டுதலைப்பற்றி சிந்தித்துக் கொண்டிருந்தேன். எனக்கு முன்னால் எட்டு வயதுக்குழந்தை ஒன்று நின்று கொண்டிருந்தது. உதவியாளர் அக்குழந்தையிடம் 'உனக்குஎன்னம்மா வேண்டும், கேளம்மா' என்றார். அக்குழந்தை 'பெரியவா தீர்க்காயுசா நன்னா இருக்கணும்' என்றாள். உடனே பெரியவா 'காமாக்ஷி' என்றார். காமாக்ஷியே பிரத்யக்ஷமாகி எல்லோரும் வணங்கினர். பெரியவாளையும், காமாக்ஷியையும் ஒன்றாக வணங்கும் பேறு கிடைத்ததோடு, அன்றுதான் நமக்கு என்று வேண்டிக் கொள்ளும் சுயநலம் கேவலமானது. உலகம் சிறக்க பெரியவாளின் அனுக்ரஹம் பொதுவானது என்ற உண்மை விளங்கியது.

**Mrs.Lalitha Balasubramaniam**
**5, Besant Avenue**
**Adyar, Madras 20**



## 96) பேசவைத்த தெய்வம்

**திருமதி.ராதா பாலகிருஷ்ணன் மறைந்த சுப்ரீம் கோர்ட் ஜட்ஜ்**

டி.எல்.வெங்கட்ராமய்யரின் மருமகளும், பிரபல அட்வகேட் திரு. பாலகிருஷ்ணன் அவர்களின் மனைவியும்) 'பெரியவா' மீது மிகுந்த பக்தியுள்ள குடும்பம். எனக்கு மூன்று பெ ண்களுக்குப் பிறகு பிறந்த பிள்ளை அசோக். மிகவும் செல்லம். மு தல் இரண்டு வயது வரை நன்றாகப் பேசி விளையாடிக் கொண்டிருந்தவன். ஆஸ்த்மாவால் அவதிப்படவே டாக்டரிடம் அழைத்துச் சென்றேன். அவர் கொடுத்த **sedative** மருந்துகளால் திடீரென்று பேசுவது குறைந்தது. எல்லாவற்றுக்கும் ஜாடை காட்ட

ஆரம்பித்தான். எத்தனையோ சிகிச்சைகள் செய்தோம். அவனுக்குப் பிறகு பிறந்த இரண்டு குழந்தைகள் கூடப் பேச ஆரம்பித்துவிட்டனர். கண்களில் நீர் ததும்ப அவன் நிற்பது என் மனதை வேதனைப்படுத்தியது. என் மாமனார் அப்போது டில்லியிருந்து இங்கு வந்திருந்தார். 'கலவை'யில் தங்கியிருந்த பெரியவாளிடம் அழைத்துப் போவதாகக் கூறினார். நாங்கள் குடும்பத்துடன் சென்று தரிசித்தோம். என் மாமனார் குழந்தையைப் பற்றி கூறியதும் பெரியவர் 'வசம்பைச் சந்தனக்கல்லில் உரைத்து தேனில் குழைத்து நாக்கில் தடவச் சொன்னார். அங்கேயே உரைத்த வசம்பை அவரே அவன் நாக்கில் தடவினார். ஆறே மாதத்தில் அவன் பேச ஆரம்பித்தான். அவரால் ஸ்பரிசிக்கப்பட்ட பாக்கியம் பெற்ற என் மகன் பேசுவதோடு மட்டுமல்ல சிறந்த ஆன்மீகவாதியாகத் திகழ இதுவும் ஒரு காரணம் என்றே நினைக்கிறேன். அவரது கருணையைக் கூற வார்த்தைகளே இல்லை.

**Mrs.Radha Balakrishnan**
**C/o.Vidya Shankar**
**4, D' Selva Road**
**Mylapore,**
**Madras 600 004**



## 97) கலப்படம் செய்யும் அலுவலகமா என்றார்.

**திருமதி சரஸ்வதி பரமேஸ்வரன்**

முதன் முதலாக பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் என் மகளுக்கு நடன உடை தைக்கப் பட்டு புடவை வாங்க காஞ்சி சென்ற நான் 'பெரியவாளை'த் தரிசித்தேன். ஏதோ ஒரு இனம்புரியாத மகிழ்ச்சியும், ஒரு ஆகர்ஷண சக்தியும், மனச் சாந்தியும் அப்போது ஏற்பட்டதைத் தொடர்ந்து. இரண்டு, மூன்று மாதங்களுக்கொருமுறை அவரை தரிசிக்கும் பாக்கியம்

பெற்றவளானேன். ஒரு சமயம் என் கணவர் பணிபுரியும் 'அக்மார்க்' அலுவலகம் பொன்விழா கொண்டாட இருந்தது. இவ்விழா சிறப்பாக நடக்க விரும்பி காஞ்சி பெரியவரைத் தரிசனம் செய்து அழைப்பிதழ் கொடுத்து ஆசி பெறவிரும்பினார் என் கணவர். இது என்ன அலுவலகம்? என்று பெரியவா கேட்டதும் உணவுக் கலப்படத்தை கண்டுபடிக்கும் அரசாங்க அலுவலகம் என்றதும், "கலப்படம் செய்ய ஒரு அலுவலகமா?" என்று வேடிக்கையாகக் கேட்க, அனைவரும் சிரித்தனர். 'நீங்கள் எந்த ஊர்?' என்றதும் இவர் 'கேரளா' என்றார். 'புரொபஸர்' என்ற சொல்லுக்கு மலையாளத்தில் உள்ள சொல் என்ன? என்று கேட்டார். யாருக்கும் தெரியவில்லை. பிறகு நூலகத்துக்கு சென்று பார்த்தபோது மலையாளத்தில் அதற்கான வார்த்தையே இல்லை என அறிந்து வியப்படைந்தோம். 'பொன்விழா' ராஜாஜி ஹாலில் எதிர்பாத்ததைவிட அதிகக் கூட்டத்துடன் சிறப்பாக நடந்தது. என் கணவர் முப்பது வருடங்களாக தட்சனை வாங்காமல், நண்பர்களுக்கு ஜோசியம் பார்த்து சொல்வார். ஒரு சமயம் காஞ்சிக்குப் 'பெரியவாளை' காணச் சென்ற என் கணவர் பின்னால் நின்று கொண்டிருந்தார். அப்போது பெரியவா பழத்தட்டை காண்பித்து அதை அளித்தவரை அழைக்கச் சொன்னார். கூட்டத்தில் யாரென்று தெரியாமல் விழிக்க 'ஜோசியர் கொடுத்தார்' என்று பெரியவா சொன்னதும், என் கணவர் வியந்து அவர் முன் சென்று ஆசி வாங்கி அந்த பழத்தட்டையும் பெற்றுக்கொண்டார். என் வாழ்நாளில் மறக்க முடியாதது.

*சரஸ்வதி பரமேஸ்வரன்*
*15/3, வல்லப அக்கிரஹாரம் தெரு*
*திருவல்லிக்கேணி*
*சென்னை 600 005*



## 98) அனுக்கிரஹம் உண்டென்றார்

**திரு. மஹாகணபதிசர்மா (நடராஜசர்மா, நாடி ஜோசியர்)**

பூஜ்யஸ்ரீ பரமாச்சார்யாள் நம்மிடையே நடமாடும் தெய்வமாக விளங்கி வருகிறார். 'பெரியவாள்' என்று பாமரர் முதல் பண்டிதர் வரை அன்புடன் அழைக்கப்படுபவர். இப்பேற்பட்ட மஹா புருஷர் வாழ்ந்த காலத்தில் நாமும் இருக்கின்றோம் என்றால் அது பூர்வஜன்மபுண்ணியத்தால்தான் என்றே சொல்ல வேண்டும்.

'பெரியவாளை' சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாகத் தரிசித்து வருகிறேன் நான். பிரதி தினமும் காலை, மத்யானம், மாலை, இதர நேரங்களிலும் மனதார தியானத்துக் கொண்டிருக்கிறேன். ஒரு சமயம் நான் தம்பதி சமேதராக பெரியவாளைத் தரிசிக்க காஞ்சி சென்று வரிசையில் நின்று கொண்டிருந்தேன். அச்சமயம் 'பெரியவாள் பாத கமலங்களிடம் என்றும் எனக்கு மாறாத பக்தி இருக்கவேண்டும்' என்ற ஒரே நினைவுடன் நின்று கொண்டிருந்தேன். பெரியவாள் அன்றி திரு. கண்ணனை வாசிக்கச் சொல்லி தமிழ் ஆராய்ச்சிப் புத்தகம் ஒன்றில் ஈடுபட்டுக்கொண்டிருந்தார். பிறகு மெல்ல நடந்து வந்தார்கள். என் அருகில் வந்ததும் அவர் பார்வையின் தீக்ஷண்யத்தால் சிலையாகிவிட்டேன். கருணைப் பார்வையுடன் மந்தகாஸமாக சிரித்துக் கொண்டு தன்னுடைய கையை மார்பில் வைத்துக்கொண்ட ஜாடையால் நான் நினைப்பது தனக்குத் தெரியும் என்பது போல கையை உயர்த்தி அபயம் அளித்தார்கள். இன்றும் அந்தநாள் எனக்கு பசுமையாக நினைவில் இருக்கிறது.

நாங்கள் வடமாள் வகுப்பைச் சேர்ந்த பிராமணர்கள். என் தகப்பனாரின் தாய் வழி, ஸ்ரீமான் அப்பய்ய தீக்ஷிதருடைய வம்சம். எங்கள் குல தெய்வம் பரமசிவன். மரகத லிங்க பூஜை பரம்பரையாக உண்டு. இந்த மரகதலிங்கம் கீழே சாய்ந்து லேசாகக் கீறல் ஏற்பட்டுவிட்டது. இது பெரிய அபசாரம் என்று

மனவேதனை அடைந்து "பெரியவாளைத் தரிசித்து இதுபற்றி முறையிட சந்தர்ப்பம் எதிர்பாத்துக் கிடைக்கவே இல்லை". ஒருநாள் பிரும்மஸ்ரீ முகூர்த்தத்தில், நடுநிசியில் ஒரு கனவு ஏற்பட்டது. பெரிய பழங்கால வீடு, முற்றம், கூடம், தாழ்வாரம் உண்டு. நானும், என் சம்சாரமும் நின்று கொண்டிருக்கிறோம். கூடத்தில் 'பரமாச்சார்யாள்' பீடத்தில் அமர்ந்து பூஜை செய்கிறார். 'தெளிவாகப்பார்' என்று என்னை ஆக்ஞாபிக்கிறார். பூஜை தாம்பாளத்துக்கு நடுவே மரகதலிங்கம் உள்ளது. மிக்க காந்தியுடன் பிரகாசிக்கிறது. அனுக்கிரஹம் உண்டு என்று சொல்லி எனக்கும், என் மனைவிக்கும் தாமரை புஷ்பத்தை எடுத்துக் கொடுக்கிறார். இந்த சொப்பனத்தின் மூலம், எனக்கு தெளிவு பிறந்தது. கலக்கம் நீங்கியது. இதன்பிறகுதான் என் வீட்டில் வரிசையாக சுப காரியங்கள் நடக்கத் தொடங்கின. பெரியவாள் என்கிற ரூபம் தெய்வம். சித்து வேலை செய்யாது. செய்தால் அனுமதிக்காது. கருணையே உருவானது.

**Mr. Maha Ganapathy Sharma**
**22, Pandala Venugopal Naidu Street**
**Thiruvallikkeni**
**Madras - 5**



## 99) ஜீரம் மறைந்தது! முதல் ரேங்க் கிடைத்தது!

**திரு. என். சுப்பிரமணியம் சிவில் இன்ஜிரியர்.**
**(காஞ்சிமடத்து கட்டிடவேலை கவனிப்பவர்)**

நாற்பது வருடங்களுக்கு முன்பிருந்தே மடத்துக்கு செல்ல ஆரம்பித்தவன் நான். தந்தை திரு. நாராயணஸ்வாமி அவர்களும் எழுபது வருடங்களாக மடத்துடன் தொடர்பு கொண்டவர். பாத பூஜை, பிட்சை, பெரியவா உத்தரவை கேட்டு நடப்பது எங்கள் வழக்கம். ஞாயிற்றுக் கிழமைகளில் 'பெரியவா' உத்தரவுப்படி ஸ்டான்லி மருத்துவமனை சென்று பிரசாதம் கொடுத்து வருகிறோம். தீபாவளிக்குப் புனித கங்கை நீர்,

எண்ணை ஒரு சொட்டு வார்டில் உள்ள அனைவருக்கும் அளித்து இனிப்பும் வழங்குகிறோம். பெரியவா உத்தரவுப்படி கட்டிடம் புதுப்பிக்கும் வேலையில் கௌரவ கண்காணிப்பாளராக இருக்கிறேன். பெரியவா ஆசியுடன் நங்கநல்லூரில் வயோதிகர் இல்லம் தொடங்கி இரண்டரை வருடமாக நடத்தி வருகிறேன். *1964*ல் பெரியவா *4* நாட்கள் தங்கியிருந்தபோது என் வீட்டு ஹாலில் அமர்ந்து 'பிடி அரிசி திட்டம்' தொடங்குவதைப்பற்றி கலந்தாலோசித்து முடிவு செய்ததை என் பாக்கியமாகக் கருதுகிறேன். அவர் அனுக்ரஹத்தால் நாங்கள் நல்லபடியாக இருக்கிறோம். சமீபத்தில் நடந்த ஒரு நிகழ்ச்சியைப்பற்றி சொல்கிறேன்.

என் மகள் வைஷ்ணவி டி.ஏ.வி. பள்ளியில் பத்தாம் வகுப்பு, சென்ற வருடம் படித்தபோது டிசம்பர் மாதம் முழுவதும் பள்ளிக்குச் செல்லமுடியாமல் இருந்தது. தினமும் ஜுரம், மிகவும் சோர்வாக இருக்கும் அவளை அடிக்கடி பள்ளியிலிருந்து ரிக்ஷா வைத்து அனுப்பிவிடுவார்கள். பரிசோதனைகள் எல்லாவற்றிலும் நார்மல்தான். ஜுரம் மட்டும் குறையவில்லை. வாரத்தில் இரண்டு, மூன்று நாட்கள் பெரியவாளைத் தரிசிக்கும் பழக்கமுள்ள நான் எனக்கென எதுவும் கேட்கும் வழக்கமில்லை. கூடியவரை வரிசையில் நின்று தரிசித்து பழம், பிரசாதம் பெற்றுக் கொள்வேன். அன்று நான் நின்று கொண்டிருக்கும்போது 'இன்ஜினியரைக் கூப்பிடு' என்றார் 'பெரியவா'. அருகே இருந்த தட்டிலிருந்து விபூதி குங்குமத்தைத் தான் இட்டுக்கொண்டு, தட்டோடு என்னிடம் கொடுத்தார். வில்வம், சங்குப்பூ, பாரிஜாதமென ஏழுவகை புஷ்பங்கள் அதில் இருந்தன. ஏக்கத்துடன் பார்த்த அனைவருக்கும் பிரசாதத்தை வழங்கிவிட்டு மீதியை நான் எடுத்து வைத்துக் கொண்டேன். ஒரு மணிக்குப் பெரியவாளிடம் என்னை அழைத்துச்சென்ற அரக்கோணம் பாலுவை பார்த்தபோது 'ஜுரஹரேஸ்வரர்'

பிரசாதம் அது என்று சொன்னதும் ஆச்சரியப்பட்டேன். சிவன் கோவில்களில் ஜுரஹரேஸ்வரர் சன்னதி இருக்கும். வைதீஸ்வரன் கோவிலில் கூட சிவனுக்குப் பின்புறம் மூன்று தலை, மூன்று கை, மூன்று கால்களென இருக்கும். அந்த பிரசாதத்தை அவர் என்னிடம் கொடுத்த காரணம் இப்போது புரிந்துவிட்டது. வீட்டுக்கு வந்து ஒரு வாரம் என் பெண்ணுக்கு அதை தினமும் இட்டேன். ஜுரம் தேவலையானதோடு ஒரு மாதம் பள்ளிக்குச் செல்லாமல் இருந்த நிலையிலும் 10-ம் வகுப்பில் முதல் மாணவியாக வந்தாள்; சமஸ்கிருதத்தில் 100% எடுத்தாள். ஓராயிரம் இது போல சொல்லலாம்; நான் போதாது. அவரது பேரருளுக்கு ஈடு இணையே கிடையாது!

Mr. N. SUBRAMANIAN,
11, I St STREET,
SOUTH GOPALAPURAM, MDS..86., PH.: 8272516

ஸ்ரீ...

## 100) பாதத்தை சிரசில் வைத்தார் என் ஆசை தீர்ந்தது.

டி.பி. நடராஜன்

ஐந்து வருடங்களுக்கு முன்பு பெற்றோருடன் நான் காஞ்சி மடத்துக்குப் போனேன். ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் பூஜை செய்து கொண்டிருந்தார். எங்களிடம் பாதபூஜை பண்ணலாமே என்றார். பிறகு பிட்சாவந்தனம் பண்ணக்கூடாதா? என்றார். அவையெல்லாம் பற்றி விபரம் ஒன்றும் தெரியாததால் பயம் ஒரு பக்கம் இருந்தாலும், எங்களைக் கேட்டதில் ரொம்ப சந்தோஷமாக இருந்தது. பூஜை முடிந்து தீர்த்தம் தந்தார். டாக்டர் சுப்பிரமணியம் (நரம்பியல் நிபுணர்

டாக்டர் கல்யாணராமன் அவர்களின் தந்தை) அவர்கள் வருடத்துக்கு 150 பிட்சா வந்தனம் செய்பவர் அப்போது அருகில் இருந்தார். நீங்கள் செய்யுங்கள் என்றார். ஆகஸ்டு மாதம் 15 ம் தேதி விடுமுறை தினம் மறுநாள் ஞாயிற்றுக்கிழமையும் விடுமுறை என்பதால் பிட்சாவந்தனம் ஏற்பாடு செய்தோம். அன்று ராமாலாட்ஜில் இரண்டு ரூம் போட்டு என் ஆறு சகோதரர்கள் இரு சகோதரிகள் (ஓரிருவரைத்தவிர) வந்தனர். பூஜை முடிந்து மடத்தில் சாப்பிட்டோம். உத்தரவு வாங்கப் போனோம். என் பெற்றோரிடம் ஊர், தொழில் எல்லாம் கேட்டார் பெரியவா. தட்டாத்திமூலை பத்மனாபன் என்பது அப்பா பெயர். என் தொழில் பற்றி கேட்டார். அருகில் இருந்த யாரிடமும் பேசாமல் எங்களுடன் நாற்பது நிமிடங்கள் பேசி 'க்ஷேமமாயிருங்கள்' என்றார். 'நல்வாக்கு வந்துவிட்டதே' என்றார். என் தந்தைக்கு சதாபிஷேகமும் நடந்து நல்படியாக இருக்கின்றார். 'பத்மகல்யாண் டிரஸ்ட்' என ஏற்படுத்திக் கொண்டு குடும்பத்தின் அங்கத்தினராகி பணம்போட்டு பிட்சை செய்கிறோம்.

கோபாலபுரம் மணி எனும் இன்ஜினியர் மடத்துக்கு நெருக்கமானவர். 'புக்கே என்னுமிடத்தில் கட்டும் கோவிலை நீ பார்த்துக்கொள் என்று பெரியவா சொன்னதால் அடிக்கடி போவார். கனவில் வந்து பெரியவா, ஒரு நாளைக்கு எத்தனை தடவை போவாய் என்றதும், நான்கு தடவை என்றாராம். கையில் என்ன? என்றதும் மஞ்சள் பை வைத்திருந்தார். பத்தாயிரம் ரூபாய் இருக்கு என்றதும் ஐந்தாயிரம் கொடு என்றாராம். மறுநாள் கனவில் அவர் கேட்ட தொகையைக் கொடுக்க என்னையும் அழைத்துப் போனார். சந்தோஷப்பட்டேன். காஞ்சிமடத்தில் நடக்கும் கட்டிடப் புதுப்பிக்கும் வேலையில் 'அலுமினியம் பார்ட்டிஷன் வேலை' எனக்குக் கிடைக்க வேண்டுமென நினைத்தேன். பெரியவா மணியை அழைத்தார். இருவரும் போனோம். என்னை யாரெனக் கேட்டார். என் தொழில் பற்றி கூறியதும், பெரியவா முன் மணி அவர்கள் வைத்த பணத்தை

எனக்கு அட்வான்சாகக் கொடுத்ததும் ஆச்சரியத்தில் எனக்குப் பேச்சே வரவில்லை.

புதுக்கட்டிடம் முடிந்து பிர்லா குடும்பத்தனரின் கூட்டம், ரவி அவர்களிடம் சொன்னேன். தரிசனம் இன்று கஷ்டம் என்றார். பிறகு எப்படியோ ஜன்னல் வழியாக தரிசித்தேன். வெளியே அமர்ந்து ருத்ரம் சொன்னேன். நீ மட்டும் வா என ரவி அழைத்துச் சென்றார். திரு. குமரேசனும் அங்கு இருந்தார். பெரியவா பாதம் என் சிரசில் படவேண்டும் என்ற என் விருப்பத்தை சொன்னதும், தன் பாதத்தைப் பெரியவா என் சிரசில்வைத்தார். ஆஹா! **Such a fine experience!** என்னவென்று சொல்வேன்? அவரை தரிசிக்கத் நினைத்தாலே நிறைவேறுவது என் பாக்யமாகும்.

**Mr. T.P. Natarajan,**
**11, Narasimhalala St.,**
**Triplicane**
**Madras - 600 005**



